# ஒன்பதும் ஒன்றும்

(சத்குரு ஸ்ரீ த்யாகராஜ தரிசனம்)



பேராசிரியை

டாக்டர் சரஸ்வதி இராமநாதன்

# ஒன்பதும் ஒன்றும்

## (சத்குரு ஸ்ரீ த்யாகராஜ தரிசனம்)


பேராசிரியை

டாக்டர் **சரஸ்வதி இராமநாதன்** **M.A., Ph.D.,**



இந்த நூல் திருமலை - திருப்பதி
தேவஸ்தானத்தின் நிதி உதவி பெற்று
வெளி வருகிறது என்பதை
நன்றியுடன் தெரிவிக்கிறோம்.



*ஸ்ரீ ராமஜெயம் பதிப்பகம்,*

108/96 மெயின்ரோடு,

**பள்ளத்தூர்** 630 107.

## நூற் பதிப்பு விளக்கம்

| | | |
|---|---|---|
| தலைப்பு | : | ஒன்பதும் ஒன்றும் |
| நூற்பொருள் | : | ஆன்மீகக் கட்டுரை |
| ஆசிரியர் | : | Dr. **சரஸ்வதி இராமநாதன்** M.A., Ph.D., |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| வெளியீடு | : | **ஸ்ரீ ராமஜெயம் பதிப்பகம்,** |
| | : | 108/96 மெயின்ரோடு, |
| | : | **பள்ளத்தூர்** 630107. |
| பதிப்பு | : | முதல் |
| நாள் | : | நவம்பர் 2003 |
| புத்தக சைஸ் | : | 1/8 டெம்மி |
| தாள் | : | மேப்ளித்தோ |
| அச்சு | : | 14 Pt. |
| நூற்படி | : | 1000 |
| பக்கம் | : | 128 |
| விலை | : | ரூ.60 (ரூபாய் அறுபது மட்டும்) |

அச்சும் அமைப்பும் :

தெய்வம் உடனடி ஆப்செட் அச்சகம்,
புதிய பேருந்து நிலையம், காரைக்குடி-1.
Ph: [04565] 237843, 234961.
Cell : 98424-34961, 98425-28676,98428-34961

---

புத்தகத் தொடர்புக்குரிய முகவரி :

**டாக்டர் சரஸ்வதி இராமநாதன்** M.A., Ph.D.,
ஸ்ரீ ராமஜெயம் பதிப்பகம்,
108/96 மெயின்ரோடு
பள்ளத்தூர் 630 107.



"தெரதீயகராதா திருபதி - வேங்கடரமண மத்ஸரமனு" - ஸ்ரீத்யாகராஜ ஸ்வாமி

தொலைவரி : 'ஆதீனம்' மதுரை
தொலைபேசி : 747474, 747475
திருச்செந்தூர் கிளை : 04639 - 45419

**புனிதமிக்க**

**ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத**

**ஸ்ரீ ஞானசம்பந்த தேசிக பரமாச்சாரிய சுவாமிகள்**

**292 ஆவது குருமகாசன்னிதானம் & ஆதீனகர்த்தர்**

**மதுரை ஆதீனம்**

70, தெற்காவணி மூல வீதி, மதுரை - 625 001.

ஆசீர்வாதம்,

பேராசிரியை டாக்டர் திருமதி. சரசுவதி இராமனாதன் அவர்களுடைய சிறந்த சீரிய சமய, சமுதாயப் பணிக்காக மற்றும் தமிழ்ப்பணிக்காக திருச்சி மாநகர்ச் சான்றோர், ஆன்றோர்கள் சேர்ந்து "முத்தமிழ்ப்பேரரசி" என்ற கௌரவப்பட்டமளிப்பு விழா நடத்தயிருப்பதை அறிந்து மகிழ்ந்தோம். "முத்தமிழ்ப் பேரரசி"யின் பணி இன்னும் சிறக்கவும், அவர்கள் வாழ்வில் எல்லா நலன்களும், வளங்களும் பெற்றிட திருவருள் பாலிக்குமாறு எமது நிரந்தரத் தாய் தந்தையாகிய சிவபெருமானைப் பிரார்த்தித்து ஆசீர்வதிக்கின்றோம்.

எல்லோருக்கும் ஆசீர்வாதம்,

*ஸ்ரீ ஞானசம்பந்த தேசிகர்*

ஸ்ரீ

ஸ்ரீமதே ராமானுஜாய நம: நித்யஸ்ரீ நித்யமங்களம்

## ஸ்ரீ ரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி
## 50வது பட்டம்,
## ஸ்ரீ ரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி மடம்,

128, வடக்கு உத்திர வீதி, ஸ்ரீரங்கம்-620 006.

போன் : **432810**

## SRIRANGA NARAYANA JIYAR SWAMI

Sriranga Narayana Jiyar Swami Matam
128, North Uthra Street, SRIRANGAM - 620 006.

ஸ்ரீ மதுபயவேதாந்த ப்ரவர்த்தகராயும் ஸ்ரீஸம்யமி ஸார்வபௌமராயும், சாஸநாதிகத ஸ்ரீரங்கநாத ஸகலவித கைங்கர்ய நிர்வாஹகராயும், ஸ்ரீரங்கம் ஸ்தலத்தார்களின் முதல்வராயும் எழுந்தருளியிருக்கும்.

## ஸ்ரீமத் பரமஹம்ஸேத்யாதி
## ஸ்ரீ ஸ்ரீரங்கநாராயண ஜீயர் ஸ்வாமி

பேராசிரியை டாக்டர் திருமதி சரஸ்வதி இராமநாதன் அவர்கள் மிகச்சிறப்பாக கல்வித்துறையில் 45 ஆண்டுகள் பணியாற்றியவர். இவர் பலநாடுகள் சென்று நற்பெயர் எடுத்தவர். இவரை அறியாதவர்கள் யாரும் இலர். இவருக்கு "முத்தமிழ்ப் பேரரசி" என்ற கௌரவப்பட்டம் கொடுக்க இசைந்துள்ளார்கள். இவருடைய புகழ் மேன்மேலும் ஓங்கி இன்னும் பல பட்டங்கள் பெற்று, பல இடங்களுக்குச் சென்று பல கட்டுரைகள் எழுதி, பல பட்டிமன்றங்கள் நடத்தி மக்களை நல்வழிப்படுத்தி, பல தொண்டுகள் செய்து "தமிழ்த்தாயாகப்" பல்லாண்டு பல்லாண்டாக நீடூழி வாழ வேணுமாய் ஸ்ரீ ரெங்கநாயகி சமேத ரெங்கநாதனைப் பிராத்திக்கிறேன்.

ஆசீர்வாதம்

*ஸ்ரீ ரங்கநாராயண ஜீயர்.*

# செட்டிநாட்டில் ஒரு செண்பகப் பூ

**டாக்டர். கி. சேகர்**

முதல்வர், சிதம்பரம்பிள்ளை மகளிர் கல்லூரி, மண்ணச்சநல்லூர்,
ஆட்சிக்குழு உறுப்பினர், பாரதிதாசன் பல்கலைக்கழகம்.

**"தோன்றின் புகழோடு தோன்றுக"** என்ற திருக்குறளுக்கேற்ப தேவகோட்டையில், நாராயணன் கோமதி என்ற தம்பதியருக்கு இரண்டாவது மகளாக 19-11-1939 ஆம் ஆண்டு பிறந்தவர் பேராசிரியை முனைவர் திருமதி. சரஸ்வதி இராமநாதன் அவர்கள்.

நவம்பர் 19 ஆம் தேதி, நம் முன்னாள் பாரதப்பிரதமர் இந்திராகாந்தி அம்மையார் தோன்றிய நாளில் இவர் பிறந்தார் என்பது குறிப்பிடத்தக்கது.

சென்னைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் வித்வான் பட்டத்தையும், மதுரைப் பல்கலைக்கழகத்தில் தமிழ் எம்.ஏ. மற்றும் முனைவர் பட்டத்தையும் பெற்றவர். இந்தி மொழியில் பிரவீன், விஷாரத் முதலிய பட்டங்களையும் பெற்றவர். இசைத்துறையில் அரசுத் தேர்வான "ஹையர் டி.டி.சி" என்பதில் வெற்றி அடைந்தவர். தொடக்கத்தில் இசை ஆசிரியையாகவும் தொடர்ந்து இந்தி ஆசிரியை, தமிழாசிரியை தமிழ்ப் பேராசிரியை என ஏறத்தாழ 40 வருடங்கள் கல்வித்துறையில் பணியாற்றியவர். இவற்றுள் உயர்நிலைப் பள்ளியில் 11 ஆண்டுகளும், கல்லூரியில் 29 ஆண்டுகளும் அடங்கும்.

இப்பணிக்காலங்களில் கற்பிக்கும் பணியில் மட்டுமின்றி தமிழ்நாடு அரசுத் தேர்வாணையம் மற்றும் மதுரை காமராசர், அண்ணாமலை, கேரளம் முதலிய பல்கலைக்கழகங்களில் தேர்வாளராகவும், வினாத்தாள்

அமைப்பாளராகவும் குறிப்பிடத் தகுந்த நிலையில் செயல்பட்டவர் இவர். மதுரை காமராசர் பல்கலைக்கழகக் கல்விக்குழு உறுப்பினராகவும் பொறுப்பு வகித்தவர்.

காஞ்சி மாமுனிவர், மகா பெரியவர்களின் கருணையால் திருவண்ணாமலை இறைபணி மன்றம் வழங்கிய காவியக் கலைமாமணி, தவத்திரு குன்றக்குடி அடிகளார் வழங்கிய "செந்தமிழ்த் திலகம்" திருவையாறு இராமாயணக்குழு வழங்கிய "சொல்லின் செல்வி", மூதறிஞர் பி.ஸ்ரீ ஆச்சாரியார், பாளை கம்பன் கழகத்தில் வழங்கிய "கம்ப இராமாயண நவரசத்திலகம்" திருப்பூர் தமிழ்ச்சங்கம் வழங்கிய "இயல் இசை அரசி", மூப்பனார் அவர்கள் குடந்தை கம்பன் கழகத்தில் வழங்கிய "ஆன்மீக அமுதசுரபி" தேனி வரசித்தி விநாயகர் ஆலயத்தில், கவியரசி செளந்தரா கைலாசம் வழங்கிய "அமுத சொல்லருவி" அம்மாப்பேட்டை பாரதியார் பேரவையில் நீதியரசர் மு.மு. இஸ்மாயில் வழங்கிய "நற்றமிழ் சொல்லரசி" குடந்தை வாணி விலாச சபா வழங்கிய "இசை வாணி", திருவனந்தபுரம் கரமனை முத்து மாரியம்மன் ஆலயம் வழங்கிய ஞானத்தமிழ் வாருதி, கவியரசு கண்ணதாசன் வழங்கிய "செட்டிநாட்டில் ஒரு செண்பகப்பூ" ஆகிய பட்டங்கள் இவர்தம் திறன் நோக்கி அளிக்கப்பெற்ற ஊக்குவிப்புகள் ஆகும்.

சென்னை, கண்ணதாசன் கலை இலக்கிய மையத்தில் மெல்லிசை மன்னர். எம்.எஸ். விஸ்வநாதன், "கண்ணதாசன் இசைக்குயில்" என்று முன்மொழிந்த பெயரை இன்று உலகமே வழிமொழிகிறது. பாரத ரத்னா எம்.எஸ். சுப்புலெட்சுமி தம் சதாசிவம் அறக்கட்டளை சார்பாக வழங்கிய கம்பன் அடிப்பொடி விருது, இவர் தம் கவிச்சிறப்பை புவிச்சிறப்பாக்கியது. ஸ்ரீ ராம் குரூப்ஸ் நிறுவனம், "பாரதி தமிழ் பணிச்செல்வி" ஆக இவரைக் கண்டு பாராட்டியது.

இவர் மாதா ஸ்ரீ அமிர்தானந்தமயிமாதா சேவா சங்கம், தெய்வீக வாழ்க்கைச் சங்கம், தொழு நோயாளர் விடுதி ஆகியவற்றின் முன்னேற்றத்தில் தம்மை இரண்டற இணைத்துக் கொண்டவர்.

1996 ஆம் ஆண்டு தம் கன்னிப்பேச்சைத் தொடங்கிய இவருடைய தனிப்பேச்சு, தனிச்சிறப்பு பெற்றது. தொடர் சொற்பொழிவு பாராட்டுதலுக்குரியது. இராமாயணம், மகாபாரதம், பெரியபுராணம், கந்தபுராணம், திருவிளையாடற் புராணம், தேம்பாவணி, சீறாப்புராணம், காந்தீயம் ஆகிய இலக்கியங்கள் இவர்தம் சொற்சுவைத் திறத்தால், நம் செவிநுகர் கனிகளாயின.

"மாற்றம் மானுட தத்துவம்" எனினும் திருவையாறு ஸ்ரீ தியாகராஜர் ஆராதனை விழாவில் 10 ஆண்டுகளாக இவர் ஆற்றும் மதிய இசை உரை என்றும் மாறாத ஒன்று. திருவாரூர் மும்மூர்த்தி விழா, திருப்பூந்துருத்தி ஸ்ரீ தீர்த்த நாராயணர் ஆராதனை விழா ஆகியன இவர்தம் பொழிவின்றி நிறைவடையா. சென்னை மியூசிக் அகாடமி, கிருஷ்ண கானசபா, நாரதகான சபா ஆகியன இவர் தம் இசைப் பேருரையால் தம் மரபுசார் புகழை மங்காது காத்து வருகின்றன.

காற்றில் கலந்த இவர்தம் கருத்தோவியங்கள் காலத்தின் ஏட்டிலும் பதிந்து சிறக்க இவர் எழுதிய பலநூறு கட்டுரைகள் உதவுகின்றன.

கம்பன், இசை, திருவெம்பாவை, கந்தர் அநுபூதி, கம்பனும் கண்ணதாசனும் ஆகிய தலைப்புகள் இவர்தம் சிந்தனைப் பூக்களை கடைவிரித்துக் காட்டின.

பட்டி மன்றங்கள், வழக்காடு மன்றங்கள், சுழலும் சொல்லரங்கங்கள் ஆகியவற்றில் முதன்முதலாக இசைத்தமிழைக் கூட்டி, மரபும் பதமும் குறையாமல் வடித்துக்காட்டிய இவருடைய சொல்வன்மையும், இசை மென்மையும் கேட்டாரைப் பிணித்து கேளாரை இழுத்தன.

இவர்தம் கால்பட்டதால், கவியரங்கத்தின், கல்லான சொல்லும் கலையாகும் வரம் பெற்றது. இவராற்றும் நேர்முக வருணனைகள், நம் கண்ணையும் கருத்தையும் ஒருமுகப்படுத்தும் உயிர்க்காட்சிகளாகும். இயலும், இசையும் நாடகமும் இடையூறு இன்றி தம் பங்கை இவருரையில் ஏற்று மகிழும், நிறைவான தமிழ்ப்பணியை இலங்கை, மலேசியா, சிங்கப்பூர், லண்டன், ஹாங்காங், ஆஸ்திரேலியா ஆகிய நாடுகளில் 23 முறை சென்று முறையாகச் செய்தவர் இவர். பல நாட்டு வானொலியும் இவர் பொழிவால் பலமுறை தேனொலியைப் பாய்ச்சின.

கண்தானத்திற்குப் பதிவு செய்துள்ள இவர், அறக்கட்டளை ஒன்றை நிறுவி, கல்வி, சமுதாயப் பணி செய்து வருகிறார்.

ஜேசிஸ், அரிமா, சுழற்சங்கம் ஆகிய நிறுவனங்கள் நற்சான்றுகளை இவருக்கு வழங்கி நற்பேற்றைப் பெற்றன.

"I have miles to go" என்பது இவர் தாரக மந்திரம்.

தன் வாழ்க்கையில் ஏற்பட்ட தடைக்கற்களைப் படிக்கற்களாக மாற்றி "பெண் சொற்பொழிவாளர்கள்" இலக்கிய மேடையில் ஆண்களுக்கு இணையாகத் திகழமுடியும் என்ற சாதனையைப் படைத்துக்காட்டியவர்.

# எம். எஸ். விஸ்வநாதன்

இசை அமைப்பாளர்

46. சாந்தோம் ஹைரோடு
சென்னை - 600 028.
போன் : 4941246

பேராசிரியர். டாக்டர். திருமதி. சரஸ்வதி இராமனாதன் அவர்களை பல ஆண்டுகளாக நான் அறிவேன். அவர் அற்புதமான ரசிகர், ஆராய்ச்சியாளர், கலைவித்தகர், அருந்தமிழ் அவரிடமிருந்து அருவிபோல் கொட்டும். எந்தத் தலைப்பையும் எடுத்து ரசிகர்களை ஈர்த்துத் தமிழ்த் தொண்டு செய்பவர். உலகத் தமிழர்களின் உள்ளங்களில் வாழ்பவர். குறிப்பாகக் கவியரசர் கண்ணதாசன் கவிதைகளையும், பாடல்களையும் ஆராய்ச்சி செய்து, விமர்சிக்கும் பாங்கு, அனைவரையும் மயங்கச் செய்யும். உலகம் முழுக்க வலம் வந்து, அவர் ஆற்றிய தமிழ்த்தொண்டு உன்னதமானது.

இப்படி சகல சிறப்புகளும் அமைந்த திருமதி. சரஸ்வதி ராமனாதன் அவர்கட்கு, "முத்தமிழ்ப் பேரரசி" என்ற பட்டத்தை வழங்கி, பாராட்டி கவுரவிப்பது முத்தமிழையே கவுரவிப்பதாகும். பொதுவாக நான் ரசிகரை ரசிக்கும் ரசிகன். அந்த வகையில் திருமதி. சரஸ்வதி இராமனாதன் அவர்கள் ஒவ்வொரு இலக்கியத்தையும், தான் ரசித்து ரசித்து, மக்களையும் ரசிக்க வைக்கும் பேச்சுக்களை இறைவன் அவருக்கு அளித்த வரம். அவரது சொற்பொழிவை, நேரிலும் ஆடியோ கேஸட்டுகளிலும் பலமுறை கேட்டு பரவசமடைந்தவன் நான்.

அன்பன்,

**M.S. விஸ்வநாதன்**

## ஜி. கே. சுந்தரம்

Chairman & Managing Director
The Lakshmi Mills Co. Ltd.,
Coimbatore - 641 037.

Phone : Office : 215461 - 215468
Resi : 21826
Telex : 0855 - 8212
Fax : 217562.

பல்கலை கழகத்தின் பல பட்டங்களைப் பெற்றதோடு பட்டங்களுக்கு ஏற்பப் பல தகுதிகளையும் வளர்த்துக் கொண்ட கலைமகளின் பெயருடைய திருமதி. சரஸ்வதியைப் பல ஆண்டுகளுக்கு முன்பே தமிழுலகம் பாராட்டி இருக்கவேண்டும். இருப்பினும் இன்னும் காலம் கடத்தாமல் பாராட்டியவர்களுக்குப் பாராட்டுக்கள்.

முத்தமிழ்ப் பேரரசிக்கு எனது மனங்கனிந்த வாழ்த்துக்கள்.

(G.K. சுந்தரம்)



# பிரேமா நந்தகுமார்

91, தெற்குச் சித்திரை வீதி,
ஸ்ரீரங்கம் - 620 006.

திருமதி. சரஸ்வதி இராமநாதனுக்கு மிகப் பொருத்தமாகப் பெயர் வைத்திருக்கிறார்கள். பெற்றோர் வைத்த பெயரை நிலைநாட்டும் படியாக, திருமதி. சரஸ்வதியும் கலைமகளாக விளங்குகிறார். இந்தியப் பண்பாட்டின் உயர்ந்த கூறுகளை, கேட்டோர் மனங்கள் மலரும் வகையில் சொற்பொழி வாற்றியும், பாடம் சொல்லியும் வருகிறார்கள். இவரது உரைகள் இடத்திற்கு ஏற்ப பொருத்தமாக அமைவது மட்டுமின்றி, அந்த இடத்துக்கே ஏற்றம் தந்துவிடுகின்றன.

இரண்டு மறக்க முடியாத அனுபவங்கள் :

திரு. வி. பா. கா. சுந்தரம் அவர்கள் தயாரித்த தமிழிசைக் கலைகளஞ்சியம் வெளியீடு இசையுடன் குழைத்து நூலை திருமதி. சரஸ்வதி விமரிசனம் செய்ததை இன்றும் பாராட்டிக்கொண்டே இருக்கிறேன்.

சில ஆண்டுகளுக்கு முன் தியாகராஜ ஆராதனையில் ஸத்குருஸ்வாமியையும் காஞ்சிப்பரமாச்சாரியாளையும் ஒப்புமை காட்டி ஒரு சிந்தனைக்களஞ்சியத்தையே உருவாக்கி விட்டார். கேட்டோர் அனைவரும் பரவசப் பட்டுப்போனோம்.

இந்த உன்னதமான பணியில் திருமதி. சரஸ்வதி பல்லாண்டு பல்லாண்டு ஈடுபட்டிருக்கவேண்டும். அவருக்கு அனைத்து நன்மைகளும் நீடித்திருக்கவேண்டும் என்று ஸ்ரீரங்கம் திவ்விய தம்பதிகளை வேண்டிக்கொள்கிறேன்.

*அன்புடன்,*
*பிரேமா நந்தகுமார்.*

# முயற்சியால் முன்னேறிய முழுநிலவு

பேராசிரியை டாக்டர் சரஸ்வதி ராமநாதன் அவர்கள் முயற்சியால் முன்னேற்றம் அடைந்தவர், பெரும் முயற்சியாளர், பல நல்ல பண்புகளுக்கு விளக்கமாகவும் சான்றாகவும் அமைந்தவர்கள்.

கொஞ்சம் 'பிளாஷ் பேக்'கைப் பார்ப்போமா?

தேவகோட்டை தமிழ் இசைப் பள்ளியில் வன்தொண்டர் சங்கரன் அண்ணா அவர்களிடம், அன்று சிறுமியாக இருந்த சரஸ்வதி ராமநாதன் அவர்கள் இசை கற்கவும், மேடைப் பேச்சாற்றலை வளர்த்துக் கொள்ளவும் பயிற்சி பெறச் சென்றார்கள்.

பய உணர்ச்சி காரணமாகக் குரலில் பிசிர் அடிக்கிறது. உனக்கு மேடைப் பேச்சும் வராது. தைரியமாகப் பாடவும் முடியாது! என்று ஆசீர்வாதம் செய்து திருப்பி அனுப்பப்பட்ட சிறுமிதான், இன்று சவால்களை முறியடிக்கும் வெற்றிமிகு சரஸ்வதி ராமநாதனாக உருவாகியிருக்கிறார்.

இந்த இமாலய வெற்றியை அடைய அவர் எவ்வ்வ்வளவு முயற்சிகளை மேற்கொண்டிருப்பார் என்று எண்ணிப் பாருங்கள்! அபார சாதனை இது! "ஒரு மேடை கூட ஏற முடியாது!" என்ற சாபத்தையே வரமாக்கிக் கொண்டார் தன்னுடைய அயராத முயற்சியால்!

அவர் சென்ற பிறப்பிலும் பெரும் தவம் செய்திருப்பார் என்றே எண்ணத் தோன்றுகிறது. தமிழ்க்கடல் ராய. சொ. கவியரசர் கண்ணதாசன், கம்பன் அடிப்பொடி எனப் பல சான்றோர் இவரைப் பாராட்டிப் போற்றி வளர்த்துள்ளனர். நயத்தகு நாகரிகத்தால் தனி ஒரு பெண்மகள், உலகமெல்லாம் சுற்றிச் சுற்றித் தமிழ்ப்பணி செய்து வருவது வியந்து பாராட்டத் தக்கது.

தமிழையும் இசையையும் இவர் வளர்க்கின்றார்
அவை இவர் புகழை வளர்க்கின்றன!

எழுத்தாற்றலிலும் சாதனை படைப்பது தான் நிரந்தரப் புகழுக்கு ஆணிவேராகும். இந்நூல் அவரது புகழை மேலும் வளர்த்து விழுதாகித் தாங்கும் என்பது உறுதி.

பெண்மணீயம் பேசுவோர், பேச்சைச் சற்று நிறுத்தி விட்டு இப் பெண்மணியைப் படித்தால்..... உயர்வு உங்கள் கையில் என்பதை நிச்சயம் புரிந்து கொள்ளலாம்.

பாராட்டுக்கள்!

அன்பன்,

**வ. தேனப்பன்.**

# பொருளடக்கம்



## பாடல்களின் எண்கள்

"ஸ்ரீ தியாகராஜ ஸ்வாமி கீர்த்தனைகள்"

(பதிப்பாசிரியர் டி.எஸ். பார்த்தசாரதி)

நூலில் உள்ளபடி தரப் பெற்றுள்ளன.

ராமன், த்யாகராஜர், ஸ்வாமி என்றே வார்த்தைகளை எழுதுகிறேன். இராமன், சுவாமி தியாகராசர் என்று தமிழ் மரபில் எழுதவில்லை. ர, ஸ, க்ஷ, ஷ, த்ர என்ற வடமொழி உச்சரிப்பு எழுத்துக்கள் அப்படியே தரப் பெற்றுள்ளன.

உ

ஸ்ரீ ராமஜெயம்

# சத்குரு துதி

**நாட்டை**

ராம பிரம்ம சுபுத்ராய
ராம நாம சுகாத்மனே!
ராமச் சந்த்ர ஸ்வரூபாய
த்யாக ராஜாய தே நம:

**கௌளை**

காவேரி தீர வாஸாய
காருண் யாம்ருத வர்ஷிணே!
அவனீசுர ராஜாய
த்யாக ராஜாய தே நம:

**வராளி**

கான சாஸ்த்ர ப்ரவீணாய
கலி கல்மஷ நாஸினே
சரணாகத போஷாய
த்யாக ராஜாய தே நம:

**ஆரபி**

காருண்ய சமுத்ராய
லோகா னுக் ரஹ காரிணே!
ஸாகே தாதிப பக்தாய
த்யாக ராஜாய தே நம:

**ஸ்ரீ**

காமக்ரோதாதி ரஹிதம்
ராமபக்தி ஸிரோமணிம்
த்யாகராஜ குரும்வந்தே
சங்கீதாப்தி கலாநிதிம்!

1. காவேரிக் கரையமர்ந்து, கருணை வாரிதியாய்க் கானம்
நாவேறப் பாடியநல் த்யாகராஜ குருவே போற்றி!

2. கலிதரு துன்பம் நீங்க, ஹரி நாம ஸ்மரணை செய்த
கண்கண்ட கானமூர்த்தி வடிவமே போற்றி, போற்றி!

3. சீதம்மா அன்னையாக ஸ்ரீராமன் தந்தையாகச்
சீர்நேசம் கொண்ட பக்திச் செம்மலே போற்றி! போற்றி!

4. வாடிடும் பயிர்கள் உய்ய வான்மழை வந்தாற் போலத்
தேடிடும் அன்பர் கண்ணில் தெரிந்திடும் அருளே போற்றி!

5. ஐயாறு மேவி என்றும் அன்பர்கள் உய்யுமாறு
மெய்ந்நாத வேள்வி செய்த மேன்மைகொள் குருவே போற்றி!

# 1. நயமும் விநயமும்

திருவாரூர் என்ற திவ்யத்தலம் பல்வேறு சிறப்புக்களை உடையது. 'கமலையில் பிறக்க முக்தி' என்பர் பெரியோர். திருவாரூரில் பிறந்தாலே மோட்சமாம்! ஆரூர்ப் பிறந்தார் எல்லாம் சிவகணங்கள் என்பர்! சங்கீதமும் மூர்த்திகளும் வாழ்ந்த பெருமை கொண்டது திருவாரூர்! 18 ஆம் நூற்றாண்டைக் கர்நாடக இசையின் பொற்காலம் ஆக்கிய மூவர், ஸ்ரீ நாதஜோதி முத்துசுவாமி தீட்சிதர், ஸ்ரீ ஸ்யாமா ஸாஸ்திரிகள், ஸ்ரீ தியாகராஜர் ஆகியோர் வாழ்ந்த இல்லங்கள் போற்றிக் காக்கப்பட்டு வழிபாட்டுத் தலங்களாக உள்ளன. காஞ்சிப் பெரியவர்களின் அருளாணையால் இப்புண்ணிய கைங்கரியம் நடக்கிறது.

ஸ்ரீ கண்ண பரமாத்மாவைப் பெற்ற தாய் தேவகி ஆனால், வளர்க்கும் பேறு பெற்றவள் யசோதை அதுபோல ஸ்ரீ தியாகராஜருக்கு **ஆந்திரத்தாய்** தான் சொந்தத்தாய், ஆனால் அவர் புகழை வளர்த்த தாய் **தமிழ்த்தாயே!** சத் குருவின் கீர்த்தனைகளைப் பெரும்பாலும் அவரது சிஷ்ய பரம்பரையினர் நூறு வருடங்களுக்கு மேல் பாடிவருகின்றனர்! அவர்களில் பலரும் தமிழர் தெலுங்கு வடமொழி அறியாதவர் கூடப்பலர் இருக்கலாம். 'ஸ்ருதி' எனப்படும் வேதத்தைக் கேள்வி ஞானத்தால் அத்தியயனம் செய்வதுபோல், குருகுல வாசமிருந்து இந்தக் கீர்த்தனைகளைப் பாடி வருபவரும் இருக்கலாம். 'எந்தரோ மகானுபாவுலு, அந்தரிகி வந்தனமு' இசைவழி ராமனை நமக்குக்காட்டிய ஸ்ரீ தியாக பிரம்மம் அவதரித்தது 4-5-1767இல்! அவர் ராமனிடம் ஐக்கியமானது 1847 தை - பகுள பஞ்சமி, செவ்வாய்க்கிழமையில்.

## நயம்

பஜனைப் பாடல்கள் சில, வெறும் நாமாவளியாக இருக்கும். புரந்தர தாசர் தேவர் நாமாவோ சொற்களின் அழகுடன் பக்திபாவம் கலந்திருக்கும்! தாளபாக்கம் அன்னமாசார்யார் கீர்த்தனைகளில் தெலுங்கின் கவித்துவ அழகும், திரு அவதாரப் பெருமைகளும் கலந்து மிளிரும். சத்குருவின் கீர்த்தனைகளில் கவிதைச்சிறப்பு, நாடக நயம், பக்திப் பெருக்கு எல்லாம் கலந்திருக்கும் மேடைக்கச்சேரிகளில் பெரும்பாலும் சத்குருவின் பாடல்களே நிறையப்பாடப் பெறுகின்றன. திராட்சா பாசமாக, எளிமையான மொழி நடையில் அமைந்து இராகத்தின் முழுச்சாயையையும் காட்டுவன அவை! ஸ்வாமிகள் பிறவிமேதை! சங்கீதக்கடல்! கடல் என்பது ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் மூன்றும் சேர்ந்தால் முந்நீர் என்று பெயர்! ஆற்றுநீராக முன்னோர்களின் சங்கீத பாரம்பரியமும் ஊற்றுநீராக அவருக்கு உள்ளிருந்தே பிரவாஹித்த சங்கீத ஞானமும், மழைநீராக, நாரதர், ஆஞ்சனேயர், வான்மீகி இவர்களின் அருளாசியும் சேர்ந்தால் இவர் சங்கீத ரத்னாகரம் (கடல்) ஆனார்! "ராமநீசமானமெவரு!" "சக்கனி ராஜமார்க்க முலுண்டக". என்ற பாடல்களில் அடுக்கடுக்காகச் சங்கதிகள் போட்டுள்ளார்! அதைப்பார்த்தே இராகத்தை விஸ்தாரமாகப் பாடி விடலாம்! தோடி சங்கராபரணம் இவற்றில் 30 கீர்த்தனங்களுக்கு மேல் பாடியுள்ளார். சாவேரி, சௌராட்டிரம் கல்யாணி ராகங்களில் 20 கீர்த்தனைகள் வரை யாத்துள்ளார். பைரவி, மத்யமாவதியில் 15 கீர்த்தனைகள் பாடியுள்ளார். எல்லையற்ற மனோ தர்மம் இருந்ததால் தான் ஒரே

ராகத்தில் இத்தனை சங்கதிகள் அமைக்க அவரால் முடிந்திருக்கிறது. கனராக பஞ்சரத்னக் கீர்த்தனைகளில் ஸ்வரக் கோவைகள், சொற்களின் ஜாலம், தாளக்கட்டுக்கள் எல்லாமே கேட்பவரை மெய்சிலிர்க்க வைக்கும்! ஒவ்வொன்றில் ஒரு பாணியைக் கையாண்டுள்ளார். திவ்யநாம சங்கீர்த்தனைகளில் தனி அமைப்பையும், உத்சவ சம்பிரதாயக் கீர்த்தனைகளில் வேறுவிதமான அமைப்பையும், கையாண்டுள்ளார். வாக்கேயக்காரர்களில் மிகச்சிறந்த கவியாகவும் தியாகபிரம்மம் திகழ்ந்திருக்கிறார்! அவர்தம் பாடல்களில் சில நயங்களைப் பார்ப்போம்.

"ராமம் பஜேஹம்சதா" என்ற சாவேரிக் கீர்த்தனையில்

**சரணம்:2.**

தீரம் ஸுர பரிவாரம் புவனா
தாரம் ஸுகுணா காரம் ஸமலங்
காரம் துர்ஜன தூரம் ஸ்ரீ ரகு
வீரம் மேஹ்ருதி வாரம் வாரம்! (ராமம்)

**சரணம்:3.**

ராஜம் நதசுர ராஜம் ஸ்துதகஜ
ராஜம் ச்ருதி விநுதாஜம் ஸுதரதி
ராஜம் துரகவிராஜம் ஸுஜனஸ
மாஜம் த்யாக ராஜம் ராஜம் (ராமம்)

என்ற கம்பீரமான நடையைப் பார்த்து மகிழ்கிறோம்! இராமனுடைய மதயானை நடை போல அல்லவா இருக்கிறது!

அடாணா என்றதும் தியாகராஜரின் 'ஏல நீ தயராது' கிருதி தான் முதலில் நினைவில் நிற்கும்! அந்தக் கீர்த்தனையில் தான் ஓசை இன்பம், பிராசம் என்ற இயைபு எத்தனை அழகாக அமைந்துள்ளன!

(பாடல் 323)

அ.ப.

பால கனகமய **சேல** சுஜனபரி
**பால** ஸ்ரீரமா **லோல**, வித்ருதசர
**ஜால**, சுபத கருணால **வால**, கன
நீல நவ்ய வன மாலிகா பரண (ஏல)

**சரணம்**

ராரா தேவாதி **தேவா**
ராரா மஹானு **பாவா**
ராரா ராஜீவ **நேத்ர**
ரகுவர **புத்ர**

ஸார **தர** சுதா **பூர** ஹ்ருதயபரி
**வார** ஜலதி **கம்பீர** தனுஜ **ஸம்**
**ஹார** மதன ஸுகு**மார** புதஜனவி
**ஹார** ஸகல ஸ்ருதி **ஸார** நாதுபை (ஏல)

இதேபோல, 'வந்தனமு ரகு நந்தன' என்ற சஹானாராகக் கீர்த்தனையைப் பாருங்கள்!

அ.ப. ஸ்ரீதமா நாதோ வாதமா நே
பேதமா இதி மோதமா ராம (வந்தனமு)

பாடும் போதே இசையோடு, சொல்லழகும் மனத்தை மயக்கும்!

'தவதாஸோஹம்' (நான் உனக்குத் தாஸன்) என்ற புன்னாக வராளிப் பாடல் இதோ:- (பாடல் 492)

**சரணம்:**

1. வரம்ருது பாஷா, விரஹித தோஷா
   நரவர வேஷா, தாசரதே!
2. ஸரஸிஜ நேத்ர பரமபவித்ர
   சுரபதி மித்ர தாசரதே!
3. நின்னு கோரிதிரா நிருபம சூரா,
   நன்னேலு கோரா தாசரதே!
4. கன ஸம நீலா முனிஜன பாலா,
   கந கது கூகலா, தாசரதே!

**பொருள்:**

'இனிய பேச்சுடையவனே! களங்க மற்றவனே! சிறந்த மானிட அவதாரம் எடுத்தவனே! தசரதன் மைந்தனே! தாமரைக் கண்ணனே! தூய்மையானவனே! இந்திரன் தோழனே! இணையற்ற சூரனே! உன்னையே வேண்டி நின்றேன்! என்னை ஏற்றுக்கொள்! மேக வண்ணனே! முனிவர்களைக் காப்பவனே! பீதாம்பரதாரியே! நான் உன்தாஸன்!)

சொல்லிலே விளையாடுவது அறிஞர்களுக்கும், கவிஞர்களுக்கும் கைவந்த கலையல்லவா! ஒருமுறை பிரபல சங்கீத மேதை மஹாராஜபுரம் விஸ்வநாதய்யரின் இல்லத்திற்கு மணக்கால் ரங்கராஜன் வந்தாராம் அவர் நுழையுமுன்பே ஒரு பையன், **மணக்கால்** (மணக்கால்) வருகிறார் என்றானாம். **'காலைத் தட்டிவிட்டு,** மணத்தோடு 'வரச்சொல்' என்றாராம் மஹாராஜபுரம். (காலில் உள்ள தூசி, சகதி, அழுக்கு இவற்றைத் தட்டிவிட்டு, மணமாக வரச்சொல்!) டி. கே. பட்டம்மாள் அவர்களைக் காட்டி, அரியக்குடி ராமானுஜய்யங்கார், "அம்மா (பாடு) பட்டம்மா!" என்றாராம். உடனே

அம்மாளும் 'அ (றி) ரியக் கூடியவர்' என்றாராம். வாய்ச் சொற்களில் இத்தனை அழகு என்றால் பாடலில் எத்தனை அழகாக, அடுக்கடுக்கான சொற்கள் வரமுடியும் - எண்ணிப் பார்க்கலாம்! கனராக பஞ்ச ரத்னக் கீர்த்தனைகளுள் முதலாவது நாட (என்ற) நாட்டை (மே.36) ராகக்கீர்த்தனை.

பல் "ஜகதானந்த காரக
ஜய ஜானகி ப்ராண நாயக!" என்ற கம்பீரமான, எடுப்பான பாடல்! அதில் ஒரு சரணம்.

"இந்த்ர நீலமணி ஸந்நிபாபகன
சந்த்ர சூர்யநய னாப்ரமேயவா
கீந்த்ர ஜனக ஸக லேச சுப்ரநா
கேந்த்ர ஸயன சமன வைரி சன்னுத" (ஜகதா)

மோனை எதுகைக்கும், முத்தான சொல்லழகுக்கும் எத்தனை நாள் தேடினார் நம் சத்குரு! உணர்ச்சிப் பிரவாகத்தில் ஓடி வந்து குதித்த உயர் பாடல்கள் தாம்!

"உயர்வற உயர்நலம் உடையவன் எவனவன்
மயர்வற மதிநலம் அருளினன் எவனவன்"
என்று ஆற்றொழுக்கான நடை ஒரு அழகு என்றால்

'முத்தைத்தரு பத்தித் திருநகை
அத்திக்கிறை சத்திச் சரவண
முத்திக்கொரு வித்துக் குருபரன்"

என்ற சந்தம் தனி அழகுதானே!
இருவித அழகினையும் தியாக பிரம்மத்தின் நளினமான பாடல்களில் பார்த்துக் கேட்டு மகிழலாம்!

# தசாவதாரம்

ஸ்ரீ ஜெய தேவர் 'ப்ரளய பயோதி ஜலே' பாடலில் பத்து அவதாரங்களையும் பாடினார்! நம் சத்குருவும், தசாவதாரங்களையும் பாடுகிறார்.

**பூபாளம்** **சாபு** (பாடல் 498)

1. தீன ஜனாவன ஸ்ரீராமா
தானவ ஹரண ஸ்ரீராமா
வீன விமான ஸ்ரீராமா
மீன சரீர ஸ்ரீராமா

2. நிர்மல ஹ்ருதய ஸ்ரீராமா
கார்முக பாண ஸ்ரீராமா
சர்ம பலப்ரத ஸ்ரீராமா
கூர்மா வதார ஸ்ரீராமா

3. ஸ்ரீ கர சுகுணா ஸ்ரீராமா
ஸ்ரீ கர லாலித ஸ்ரீராமா
ஸ்ரீ கரு ணார்ணவ ஸ்ரீராமா
ஸூகர ரூப ஸ்ரீராமா

4. ஸரஸிஜ நயன ஸ்ரீராமா
சுரபதி வினுத ஸ்ரீராமா
நரவர வேஷ ஸ்ரீராமா
நரஹரி ரூப ஸ்ரீராமா!

இப்படி எளிய, சிறிய, சொற்களில் அவதாரங்களைக் காட்டுகிறார்!

## சீதா ராம கல்யாணம்

கவிச்சக்கரவர்த்தி கம்பர் இராமாயணத்தைப் பாட உதவியவர் சடையப்ப வள்ளல். அவரை நன்றியுடன் பாட எண்ணிய கம்பர் பத்துப் பாட்டுக்கு ஒருமுறை அவர் புகழைப் பாட, அதிகம் நரஸ்துதி செய்யக் கூடாது, ஆயிரம் பாட்டுக்கு ஒருபாடலில் அவர் பெயரைப் பாடினால் போதும் என்று மக்கள் தடுத்து விட்டனராம்! பட்டாபிஷேகப் பாடலில், அவருக்கும் நன்றி கூற ஆவல் வந்தது. கம்பருக்கு! அழகாக, அவர் பெயரை இணைத்து விட்டார். அதைப்படி? இராமன் வாழ்ந்த திரேதாயுகத்திற்கும் சடையப்பர் வாழும் கலியுகத்திற்கும் என்ன இணைப்பு?

அங்கு தான் கம்பர் தன் மதி நுட்பத்தைக் காட்டுகிறார். "அரியணை அனுமன்தாங்க, அங்கதன் உடைவாள் ஏந்த, பரதன் வெண் குடை கவிக்க, இருவர்கள் கவரிவீச, விரைசெறி குழலி ஓங்க, **வெண்ணெய்மன் சடையன்தங்கள்.**

**மரபுளோன்** கொடுக்க வாங்கி, வசிட்டனே புனைந்தான் மவுலி! என்றார். சடையப்ப வள்ளல் குலத்தைச் சேர்ந்த முன்னோன் ஒருவன் கிரீடத்தை எடுத்துத் தந்தானாம். வேளாண் பெருமக்கள் மன்னர் முடிசூட்டு விழாவில் கிரீடத்தை எடுத்துத் தரும் பழக்கம் உண்டே! எப்படியோ சடையப்பர் பெயர் வந்து, முடிசூட்டும் பாடலில் புகழ் நிலைத்து விட்டது.

அதுபோலத் தான், நம் சத்குருவுக்கு சீதா கல்யாணப் பாடலில் அனுமனைப் போற்ற ஆவல்! கல்யாணத்தில் ஆஞ்சனேயர் எங்கே வந்தார்? பாடலில் வந்து விட்டார்! "ஆஞ்சனேயரால் துதிக்கப்படும்.

ஸ்ரீராமன்" என்று பொருள் பட
"பவனஜ ஸ்துதி பாத்ர
பாவன சரித்ர -
ரவி சோம வரநேத்ர - ரமணீய காத்ர!"
(சீதா கல்யாண வைபோகமே!)
எனப் பாடி மகிழ்ந்துள்ளார்.

## பலவிதமான சரணங்கள்

ஸ்ரீ ராமனின் சரணங்களையே உறுதியாகப் பற்றி நின்ற சத்குரு தமது பாடல்களில் பலவிதமான சரணங்கள் அமைத்துயாத்துள்ளார். எடுத்துக்காட்டாக ஒருக்ருதியைப் பார்க்கலாம்.

**காம்போதி** **ஆதி** (பாடல் 247)

பல் ஸ்ரீரகுவர அப்ரமேய மாமவ (ஸ்ரீ)

அ.ப.ஸ்ரீ ரகுகுல ஜலநிதி சோம
ஸ்ரீ ராம பாலய (ஸ்ரீ)

**சரணம்.**

1. ஸாரஸ ஹித கு லாப்ஜ ப்ருங்க
ஸங்கீத லோல (ஸ்ரீ)

2. விரோசன குலேஸ்வர
ஸ்வர லயாதி மூர்ச்சனோல்
லஸித நாரத வினுத (ஸ்ரீ)

**சரணம்.3**

ஸ்ரீ பாஸ்கர குலாத்ரி தீப
ஸ்ரீ பாகவத வினுத சுசரணா
சீதா நாத த்யாக ராஜநுத
அனில சுதாப்த சுகுணா பரண (ஸ்ரீ)

## வாழ்நாள், வீழ்நாள்!

இறைவனைப் பேசாத நாளெல்லாம் பிறவா நாளே என்றார் திருநாவுக்கரசு சுவாமி வாழ்நாளை வீழ்நாளாக மாற்றுபவர்கள் எத்தனைபேர்! நாள்காட்டி என்று சொல்லி ஒவ்வொரு நாளையும், தாளையும் கிழிக்கிறோம். அது நாள் காட்டியல்ல உயிரை அறுக்கும் வாள் காட்டி! காலம் எப்படிக் கழிகின்றது என்று சத்குரு அழகாக, நயமாகக் கூறுகிறார் பாருங்கள்.

**தோடி** **சாபு** (பாடல் 24)

**பல்.** பொத்து பொய்யேநி ஸ்ரீராமுனி
பூநி பஜிஞ்சவே மனஸா-

**அ.ப.** நித்துர சேத கொந்நாள்ளு விஷய
புத்துல சேத கொந்நாள்ளு - ஓ மனஸா

**சரணம்.**
பொத்துந லேசி த்ரிதாப முலனு நருல
பொகடி பொகடி கொந்நாள்ளு பட்டி
எத்துரீதி கந்நதாவுந புஜியிஞ்சி
ஏமி தெலிய கொந்நாள்ளு-

ஓமனமே! காலம் விரைவாகக் கழிந்து விடும். நன் முயற்சியுடன் ஸ்ரீராமனைத் துதிப்பாயாக! உறக்கத்தில் சிலகாலம், இன்ப நுகர்ச்சியில் சில காலம் என்று பொழுது செல்கிறது. அதிகாலையில் எழுந்து மூவகைத் தாபங்களையும், மாந்தரையும் புகழ்ந்து சிலகாலம், பட்டிமாட்டைப் போல் கண்ட இடங்களில் தின்று ஒன்றும் தெரியாமல் வாழ்வதில் சில காலம் என்று காலம் வீணே கழிவதைக் காட்டும் நயமான பாடல் மேலும் நீள்கிறது!

சம்சாரக் கடலில் மூழ்கி மிதந்து சில காலம், ஒருவகையிலும் சேராத பாமரஜனங்களுடன் உன்மத்த மொழி பேசித்திரிவது சிலகாலம், செல்வம், மக்கள், மனை, என்று பெருமையில் கழிவது சில காலம், எப்போது நல்ல பொழுதாக இளமனை வழிபடும் காலம்? எண்ண வைக்கிறார் நம் சத்குரு!

## அணிகள் பல!

கவிதைக்கு அழகு தருவன அணிகள். உவமை, உருவகம் முதலிய அணிகளைத் தம் கீர்த்தனைகளில் சுவாமி எடுத்தாண்டுள்ளார்.

கரகரப்ரியாவில் 'ராமா நீயெட' வில் ஒரு கேள்வி கேட்கிறார்! ஆண்கள் சிலர் நாடகத்தில், திரை உலகத்தில் பெண் வேடம் போட்டு நடிப்பார்கள். பெண் வேடம் போட்டதாலேயே ஆணுக்கு பதிவிரதையின் நடத்தை தெரியுமா!

"காமினி வேஸதாரி கிஸாத்வீ நடத
லேமைன தெலுசு நா"

'ராமா நீ ஸமான மெவரு! பாடலில்-
'பாமா மருவம்பு மெலக- என்றாரே - சீதாம்மா மரிக்கொழுந்து போன்றவராம். எப்படி? வாடினாலும் கசக்கினாலும் வாசனை தருவது மரிக்கொழுந்து. துன்பத்திலும் புகழ் மணத்தோடும் இருந்தவள் பிராட்டி!

தன்பெண் பிரசவவேதனைப்படும் போது, எந்தத்தாயாவது மாப்பிள்ளையைத் திட்டுவாளா? நன்மை, குழந்தை வடிவில் வரப் போகிறது என்று தாய் மகிழ்வாள்! துன்பங்கள் வரும்போது வினை கழிந்தது என்று மகிழவேண்டும்.

**காபி** **ஜம்பை** (பாடல் 154)

**பல்.** மீவல்ல குணதோடி மேமி - ஸ்ரீராம

**அ.ப.** நாவல்லனே கானி நளினதள நயன-

**சரணம்.** தனதனய ப்ரசவ வேதன நோர்வ லேகுண்ட
அநய யல்லுநிபை அஹங்கார படலேனா
நாமனசு நாப்ரேம நன்னலய ஜேஸின
ராஜில்லு ஸ்ரீத்யாக ராஜனுத சரணா - (மீ)

ஸ்ரீரஞ்சனி ராகக்கீர்த்தனை 'புவிர் நிதாஸூட' வில்

நீ பாலிலே போட்டாலும், தண்ணீரிலே போட்டாலும் நீதான் கதி-

'பால முஞ்சின் நீடமுஞ்சி பதமுலே கதி! என்று அழகாகச் சொல்கிறார்!

"முத்து, பவளம், முழுவயிரம், மாணிக்கம், சத்தமிடும் கொலுசு, சரசரக்கும் சரப்பளிகை, சங்கிலிகள் இவை எல்லாவற்றையும் விடச் சிறிய தாலிக்கு முக்கியத்துவம் உண்டு! ஒரு பெண்ணுக்கு எத்தனை உறவினர் இருந்தாலும் 'கணவன்' என்ற ஒருவனின் உறவுக்குப் பிறகுதான் அவை! அதுபோல, ராமா! என் ஆசை, காதல் எல்லாமே உன்னை முதன்மையாகக் கொண்டவை" என்பது சத்குருவின் அனன்ய பக்திக்கு எடுத்துக்காட்டு.

**பந்து வராளி** **ஆதி** (பாடல் 414)

**பல்.** ரகுவர நன்னு மறவதகு நா

**அ.ப.** நகதர பக்தஜ நாகநிவாரண! (ரகு)

**சரணம்**

1. தல்லி தண்ட்ரு லன்ன தம்முலு உந்ந
பொலதிகி ஒகடு புருஷூண்டௌனா (ரகு)
2. பர தைவமுலு பாகு ஸொம்முலு
ஸூரநுத மங்கள ஸூத்ரமு லௌனா (ரகு)

இன்னொரு பாடல் இதோ:-

**ஸாவேரி ஆதி** (பாடல் 502)

**பல்.** ஸ்ரீராமசந்த்ர ராகவ ஸகல லோகா
தார த்வமேவ மாமவ

**சரணம்.**

4. பதி கோபிஞ்சிதே மாநவதியைன நிஜ
ஸதி நீதி நடுசுகோ நா.

5. தல்லி கொட்டிதே ஸரகுந பாலுடு
பதபல்லவமுல விடுசுநா

சரணங்களின் பொருள் ஆழம் குலசேகர ஆழ்வாரை நினைவு படுத்துகின்றது. "கண்டார் இகழ்வனவே, காதலன் தான் செய்திடினும் கொண்டானை அல்லால். அறியாக் குலமகள்- "போல உன்னைவிட்டு நான் அகலமாட்டேன். நீ அடித்தாலும் அனைத்தாலும் நான் உன்பிள்ளை உன்பாதம் விட்டு நீங்கமாட்டேன். 'அரிசினத்தால் ஈன்ற தாய் அகற்றிடினும் மற்றவள் தன் அருள் நினைந்தே அழும் குழவி' யின் நிலை எனது என்றார் ஆழ்வார். நீ துயரம் தந்தாலும், நீக்கினாலும், வெறுத்தாலும், இடித்தாலும், அனைத்தாலும், ஆறுதல் தந்தாலும் என்மனநிலை மாறாது என்ற உறுதி அற்புதமான பாடலாகிறது!

## விநயம்

சில சமயம், எத்தனை பெரிய படிப்பாளிகளும் 'நான்' என்ற அகந்தைக்குத் தப்ப முடிவதில்லை! எத்தனை பெரிய சங்கீத ஞானி நம் சத்குரு! அவருக்கு விநயம் இருந்ததே தவிர, கர்வம் இல்லவேயில்லை! தன்னை 'நீசன்', நிலையற்றவன், 'புத்தியில்லாதவன்', தவறு 'செய்பவன்' என்று தாழ்த்திச் சொல்லிக் கொள்கிறார். 'நைச்யானுசந்தானம்' என்று வைஷ்ணவ சம்பிரதாயத்தில் சொல்வார்கள். பகவன் நாம ஸ்மரணை, குணகானம், உஞ்சுவிர்த்தி தவிர வேறு எந்தச் செயலும் (தவறு நேரும்படி) செய்யாத சத்குரு, விநயத்துடன் பாடுகிறார் பாருங்கள்:- (பஞ்சரத்னக் கீர்த்தனை.)

**கெளிள** (மே.15) **ஆதி** (பாடல்.66)

**பல்.** துடுகு கல நன்னே தொர
கொடுகு ப்ரோசுரர் - எந்தோ (து)

**அ.ப.** கடுதுர் விஷயாக்ருஷ்டுடை
கடிய கடியகு நிண்டாரு (து)

**பொருள்.**

கனத்த சிற்றின்பத்தால் இழுக்கப்பட்டு, நாழிகைக்கு நாழிகை மிகுந்த துஷ்டத்தனம் செய்யும் என்னை - எந்தத் துரை மகன், அரச குமாரன் (சக்கரவர்த்தித் திருமகன், காப்பாற்றப் போகிறான்?)

'நம்மால் எல்லாம் நடக்கிறது' என்றிருப்பவன் அறிவிலி, 'எல்லாம் அவன், செயல்' என்பது ஞானியின் எண்ணம். "மனமே என் சாமர்த்தியம் எம்மாத்திரம்"

"மனஸா மந ஸாமர்த்ய மேமி! ஓ" (மனஸா)
என்கிறார் சுவாமிகள். (பாடல் 52)

## திரைவிலகாதா

திருப்பதி வேங்கட ரமணனிடம், 'என் மனத்தினை மூடியிருக்கும் பொறாமைத் திரை விலகாதா?' என்று முறையிடுகிறார். அன்பு, ஈகை, இன்சொல், இவை தவிர வேறறியாது வாழ்ந்த சத்குரு விநயமுடன் வேண்டுவது நமக்காகத்தான்.

**கௌளி பந்து** **ஆதி** (பாடல் 68)

**பல்.** தெர தீயக ராதா - லோநி
திருபதி வேங்கட ரமண மத்ஸ்ரமநு (தெர)

**அ.ப.** பரமபுருஷ தர்மாதி மோக்ஷமுல
பாரதோலு சுன்னதி நா லோனி
(தெர)

**சரணம்**

1. இரவொந்தக புஜியிஞ்சு ஸமயமுந
ஈதகுலு ரீதியுன்னதி
ஹரித்யானமு ஸேயு வேள சித்தமு
அந்த்யஜு வாடகு போயி நட்லுன்னதி

2. மத்ஸ்யமு ஆகலி கொநி கால்முசே
மக்ன மைன ரீதி யுன்னதி
அச்சமைந தீப சன்னதிநி மரு
கட்டபடி செறிசி நட்லுன்னதி

3. வாகுரமனி தெலியக் ம்ருககணமுலு
வச்சிதகுலு ரீதியுன்னதி
வேகமே நீ மதமுநநு ஸரிஞ்சிந
த்யாகராஜநுத மத மத்ஸரமநு (தெர)

**பொருள்:**

திருப்பதி வேங்கடரமணா! என்னுள் இருக்கும் பொறாமை என்ற திரைவிலகாதா? பரமபுருஷனே! தர்மம் முதலான நான்கு நான்கு வகைப் புருஷார்த்தங்களையும் அணுகவொட்டாமல் விரட்டுகிறதே!

உணவருந்தப் போகும் போது அன்னத்தில் ஈ விழுந்தமாதிரி ஹரித்யானம் செய்யும் போதும் மனம் ஏதோ (கூடாத) இடத்தை நினைப்பதுபோல, பசி கொண்ட மீன் வலையில் விழுவதுபோல, விளக்குக்கு எதிரே நின்று மறைவிடம் அமைத்தல் போல, வலை என்றறியாமல் மிருகங்கள் அகப்பட்டுக் கொள்வதுபோல, பொறாமை என்ற திரையில் நான் மாட்டிக் கொண்டேன். மதம், மாத்சரியம் ஆகிய திரைகளைத் தியாகராஜனிடமிருந்து விலக்கி அருளலாகாதா?

**"மனமே! குணம் கெட்ட மனமே!"**

மனம் ஒரு குரங்கு மதம் பிடித்த குரங்கு, தேன் குடித்த குரங்கு, அதிலும் பேய் பிடித்த குரங்கு, ஆணவமதம், அதிகாரப்பேய், ஆசைத்தேன் இவை சேர்ந்த குரங்கு மனிதமனம்! அதற்கு அடிக்கடி தொறட்டி போட்டு இழுக்க வேண்டும். 'உரம்' - மனவலிமை என்ற குச்சியால் அடித்துப் பணிய வைக்க வேண்டும். நல்லமனம் படைத்த நம் ஸ்வாமிகள், "மனமே! சொல்வதைக் கேட்கமாட்டாயா?" என்று விநயத்துடன் புத்தி சொல்கிறார்! நம்முடைய மனம் கேட்டால் சரிதான்! இனிய மலைத் தென்றல் போன்ற மலயமாருத ராகப் பாடல்.

மலயமாருதம் ரூபகம் (பாடல் 88)

பல். மனஸா எடுலோர்த்துநே நா
மனவி சே கொநவே ஓ (மனஸா)

அ.ப.தினகர குல பூஷணுநி தீனுடவை பஜனஜேஸி
திநமு கடுபு மநிந நீவு, விநவதேல குணவிஹீன (மனஸா)

சரணம்.

கலிலோ ராஜஸ தாமஸ
குணமுலு கல வாரி செலிமி
கலஸி மெலஸி திருகு சுமறி
காலமு கட பகனே,
சுலப முகா கட தேரனு
ஸுச நலனு தெலிய ஜேயு
இலனு த்யாக ராஜுமாட
விநவதேவ குண விஹீன (மனஸா)

பொருள்:

குணம் கெட்ட என்மனமே! என் விண்ணப்பத்தைக் கேள்! சூரிய குல திலகனான இராமனை விநயத்துடன் பஜனை செய்து நாள்களைக் கழிப்பாயாக என்றால் ஏன் கேட்க மறுக்கிறாய்? கலியுகத்தில் ரஜோ குணம், தமோ குணம் நிறைந்த வருடன் உறவாடித் திரிந்து, காலம் கடத்தாமல், சுலபமாகக் கடைத்தேறும் வழியைச் சொல்லும் இத்தியாகராஜனின் பேச்சுக்குச் செவி சாய்க்க மாட்டாய் போலும்!

## "நான் எதற்கு, என்று மறந்து விடாதே!"

சிலருக்குச் சிலரை, சிலநேரம் நினைவிருக்கும் எல்லோருக்கும், எல்லோரையும் எல்லா நேரமும் நினைவிருக்க நியாயமில்லையே! ஸ்ரீராமா! நீ சக்கரவர்த்தித் திருமகன் உன் உடன்பிறந்த தம்பியர் மூவர்., (பரத, லட்சுமண, சத்ருக்னர்.) உவந்தணைந்த தம்பியர் மூவர் (குகன் சுக்ரீவன், வீடணன்) பக்கத்தில் ஜானகி பாதத்தருகே அனுமன்! என்னை நினைக்க நேரமிருக்குமா? ஆனாலும் மறந்துவிடாதே ஸ்ரீ காந்தனே! என உருகும்.

**பைரவி** ராகப் பாடல் இதோ! (பாடல் 101)

பல். உபசாரமு ஜேஸேவா ருன்னாரனி மரவகுரா
(உப)

அ.ப. க்ருப காவலெ நநி நே நீ
கீர்த்தி நி பல்குசு நுண்டக (உப)

**சரணம்.**

வாகிடநே பதிலமுகா வாதாத் மஜு முந்நாடனி
ஸ்ரீ கருலகு நீ தம்மலு சேரியுன்னாரனி
ஏகாந்தமு நநு ஜானகி ஏர்ப்படி யுன்னதநி
ஸ்ரீ காந்த! பருலேலனி ஸ்ரீத்யாக ராஜவிநுத (உப)

உனக்கு உபசாரம் செய்யப் பலரும் இருந்தாலும், இந்தத் தியாகராஜன் உன் புகழையே பாடிக் கொண்டிருப்பவன் என்பதை மறந்து விடாதே! எத்தனை பணிவான பிரார்த்தனை.

பகவானே! நான் அபராதி அபராதி த்யாகராஜுக்கு ஆனந்தமு சாடுநா? குற்றம் புரிந்தவனுக்கு வாழ்க்கையில் நிம்மதி, ஆனந்தம், கிடைக்குமா? பகவானே! ஆனாலும் நீ தயாசாகரன்! கருணைக்கடல்! நாலு பேர் மத்தியில் "உன் அபராதங்களை எல்லாம் மன்னிக்க என்னால் ஆகுமோ?" என்று சொல்லி விடாதேயப்பா! கல்லாப் பிழையும், கருதாப் பிழையும், கசிந்துருகி நில்லாப் பிழையும் உன்னை நினையாப் பிழையும், எல்லாப் பிழையும், பொறுத்து ஆட்கொள்வாய்! இதுதருணம்!

**சாயாதரங்கிணி** **ஆதி** (பாடல் 260)

**பல்.** க்ருப ஜு சுடகு வேளரா ராமா! (க்ருப)

**அ.ப.** அபராத முல நோர் வசமா
யந போகவே ஸரி வாரிலலோ (க்ருப)

இப்படிக்கு எத்தனையோ பாடல்களில் மானுடர் செய்யும் பிழைகளை, அவர்தம் குறைகளைத் தம்மீது ஏற்றிக் கொண்டு, விநயத்துடன், நயமாகப்பாடும் நம் தியாகராஜ ஸ்வாமிகி ஸரி எவரே!

## 2. அறிந்ததும் அறியாததும்

**ரீதிகௌளை** **ரூபகம்** (பாடல் 140)

**பல்.** ராகரத்ன மாலிகசே
ரஞ்சில்லு நடஹரிசத (ராக)

**அ.ப.** பாக ஸேவிஞ்சி சகல
பாக்ய மந்து தாமு ராரே (ராக)

**சரணம்.**

நைகம ஷட் சாஸ்த்ர புரா
ணாக மார்த்த ஸஹிதமட
யோகிவருலு யானந்த மு
நொந்தே ஸன் மார்கமட
பாகவதோத்தமுலு கூடி
பாடே கீர்த்தன முலட
த்யாகராஜு கடதேரனு
தாரகமகு ஜேஸின் சத (ராக)

**பொருள்:**

நூறு (அநேக) ராகங்களாகிய இரத்தினங்கள் பதித்த மாலையினால், ஸ்ரீ ஹரி சந்தோஷமடைகிறான். அதை அணிவித்துச் சேவித்து, சகல பாக்யங்களும் பெறலாம் வாரீர்.

வேதம், ஆறு சாஸ்திரங்கள், புராணங்கள், ஆகமங்கள் இவற்றின் அர்த்தம் கூடியது, யோகிகள் பேரானந்தம் அடையும் நல்வழி, அதுதான் பாகவத கோஷ்டி கூடிப்பாடும் நாம சங்கீர்த்தனம், தியாகராஜன் கடைத்தேறத் தாரக மந்திரமும் அதுவே! வாருங்கள்! பாடுவோம்! இதுதான் சத்குரு அறிந்த நல்வழி!

கையாறு, வாயாறு பாயுமுன் 'ஐயாறா'! என்று அழைக்க வேண்டும்! பஞ்சநதித் தலமான திருவையாறு மிகப்பெரிய புண்ணியத்தலம். திருக்கயிலாயக் காட்சியை அப்பருக்காக இறைவன் பூவுலகில் காட்டிய தலம் இத்திருவையாறே! வைகுந்த வாசனான பெருமாள், தேவி, தம்பி, ஆஞ்சனேயன் சகிதமாகத் திருமஞ்சன வீதியில் சத்குருவின் இல்லத்தில் காட்சி தந்ததும் இங்கே தான்!

'கண்டறியாதன கண்டேன்' என்று அப்பர் சுவாமி மகிழ்ந்து பாடியதும், 'ராரா தேவாதி தேவா!' என்று அகமகிழ்ந்து ஸ்ரீ த்யாகராஜர் பாடியதும் இந்த ஊரில் தான்!

சீதம்மா, ராமப்ரம்மத்தின் மூன்றாவது மகன் ஸ்ரீ தியாகராஜரான தியாகு! பார்வதி, கமலாம்மாள் மனைவிகள் ஒரே பெண் வாரிசு. அவளும் இளமையில் மறைந்து விட்டார். இந்த வரலாறெல்லாம் நாம் அறிந்தவை! நமக்குத் தெரியாதவை பல சத்குருவிடமிருந்து தெரிந்து கொள்ள வேண்டியவை உள!

## இந்த நூற்றாண்டு

மத பேதங்களை மதங்கள் வலியுறுத்தவில்லை அன்பே அனைத்து மதங்களுக்கும் சம்மதம். எல்லா உயிர்களிலும் இறைவன் வாழ்கின்றான்! "உன்மதமா என்மதமா ஆண்டவன் எந்தமதம்? நல்லவங்க எம்மதமோ ஆண்டவன் அந்தமதம்? இது தெரிந்தும் தெரியாமல் மதச்சண்டை போடுபவர்கள் இருக்கின்றார்கள். "சாதிக் கொடுமை சொல்லிப் பகைத் தீயை வளர்ப்பவர் மூடர்" - என்று அறிந்தும் சாதிப் பிரிவினைகளை வளர்க்கிறார்கள்! அரசியலும் சாதிகளைத்

தூண்டிவிட்டு வாக்குகளில் குளிர் காய்கிறது. மத பேதம் செய்து, வாக்கு வாதம் நடத்துவது கூடாது. 2 பிரிவு மக்கள் உலகத்தில் உள்ளனர். சஜ்ஜனர், துர்ஜனர், (நல்லவர், தீயவர்!) இவர்களில் நல்லோரை ஒன்று படுத்துவதே நல்லது என்று சத்குரு அறிந்து தெரிந்து பாடுகிறார்.

**ஜயந்தசேன. (மே. 22) ஆதி** (பாடல் 163)

**பல்.** விநதா ஸுத வாஹன ஸ்ரீரமண
மந ஸாரக ஸேவிஞ்செதராம,

**சரணம்.**

மதபேத மநேசக நாஸ்திக ஸம்
மத வாக்குலு பல்குட ஸுகமா?
க்ஷிதிலோ சத்ஸங்கதி சௌக்யமு பா
லித த்யாக ராஜஅமர பால - (விநதா)

**பொருள்:**

விந்தையின் குமாரனான கருடனை வாகனமாக உடைய லக்ஷ்மி பதியே! மனமார உன்னைச் சேவிப்பேன். மதவேறுபாடு கூறுவதும், நாத்திகருடன் வாக்குவாதம் செய்வது அழகா! சுகமா! நல்லோரிணக்கமே இன்பம் தரும். தேவர்களைக் காத்தவனே!

மதபேதம் பேசுவது தவறு என்றும் நாத்திகர்கள் என்றும் எங்கும் இருப்பர் என்றும் ஏறத்தாழ நூற்றி அறுபது வருடங்களுக்கு முன்னரே இன்றைய நிலையைத் தீர்க்க தரிசனத்துடன் பாடும் ஆற்றல் சுவாமிக்கு இருந்திருக்கிறது!

## ஆசை

'ஆசையே அலைபோலே என்றார் கவியரசர். ஒரு அலையை அடுத்து, அடுத்த அலை வருவது கடலின் தன்மை! ஆசையும் அடுத்தடுத்துப் பெருகி வருவது தான். அலை மேலே படகு போகலாம். ஆசை அலை அளவோடு இருந்தால், வாழ்க்கைப் படகு முன்னேறும். படகுக்குள் அலை வந்து, தண்ணீர் வந்துவிட்டால் படகின் நிலை என்ன? ஆசை அலை வாழ்க்கைப் படகை அமிழ்த்தி விடக்கூடாது! மனிதனுக்குப் பல விலங்குகள்! ஆசை விலங்கு, பாசவிலங்கு, அகந்தை விலங்கு, பகட்டு விலங்கு, பணவிலங்கு, பதவி விலங்கு, பந்தம் என்னும் விலங்குகள் பலவிதம்! அவனே விலங்கிலிருந்து பிறந்தவன் தான்! நமக்கு ஏதேதோ ஆசைப்படத் தெரியும். சுவாமி அறிந்த ஆசை என்ன?

**அஸாவேரி (மே.8) தேசாதி** (பாடல் 28)

**பல்.** ஏபநி கோ ஜன்மிஞ்சிதி நநி நீவெஞ்ச
வலநு ஸ்ரீராம, நேனு (ஏ)

**அ.ப.** ஸ்ரீபதி ஸ்ரீ ராமசந்த்ர நீ சித்தாநிகி
தெரியலேதாநேனு (ஏ)

**சரணம்.**

வால்மீகாதி முநுலு நருலு நின்னு
வர்ணிஞ்சிந நாயாஸ தீருனா?
மேல்மியை யுண்டு ஸத்பக்துலு
மெச்சுதுரே த்யாகராஜ றுதநேனு (ஏ)

லக்ஷ்மியின் நாயகனே! ஸ்ரீராமா! நான் எந்தக் காரியத்திற்காக இப்புவியில் பிறந்தேன்? (உன் புகழைப் பாடவே என்று) உன் உள்ளத்திற்குத் தெரியாதா?

வான்மீகி, பரத்வாஜர், அகஸ்தியர் ஆகிய முனிவர்களும். கம்பர் முதலான மனிதர்களும் உன்னைப் பாடிவிட்டாலும் என் **ஆசை** தீருமா? நான்பாடுவேன். உத்தமர்களான பக்தர்கள் மெச்சுவார்கள்!

இராமனைப் பாடும் பணியே பணி என்று வாழ்ந்தார் சத்குரு ஏன் பிறந்தோம் என்பதை அறிந்தவர் சத்குரு. அதை அறியாமல் வாழ்பவர் பலர்! எந்த ஆசை வைக்க வேண்டும் என்று அறிந்தவர் அவர். அறியாதவர் நாம்.

"கந்தனைப் பாடவே வந்தேன் இப்பிறவிகொண்டு' என்று அறிந்து பாடினார் அருணகிரிநாதர். 'அகத்தே கறுத்துப் புறத்தே வெளுத்திருந்த சகத்தோரைத் திருத்திச் சன்மார்க்கத்தில் நிலை நிறுத்தத்தாம் வந்ததாக' வள்ளலார் உணர்ந்தார். அதன்படி சன்மார்க்க சங்க ஸ்தாபனாச் சார்யார் ஆனார்! இப்படி அறிந்து, உணர்ந்து தன் பிறவியைப் பயனுள்ளதாக, அர்த்தமுள்ளதாக ஆக்கியவர் ஸத்குரு!

## தனிக்கட்டையா?

நம் தியாகராஜ ஸ்வாமி இல்லறத்திலிருந்த போதும் என்றுமே ஒட்டாது வாழ்ந்தவர்தாம்! அதிலும் இருமனைவியர், மகள், போனபின் தனிக்கட்டை! அவரை, இவரோ ஒண்டிக்கட்டை, கையில் சிப்ளாக்கட்டை, கழுத்தில் துளசிக்கொட்டை என்று சில மட்டைகள் பேசித்திரிந்தனர்! யார் அனாதை? உலகில் **அநாதன்** ஒருவன் உண்டு! தனக்கு மேல் நாதன் இல்லை ("அநாயகைக நாயகம்") என்பவன் இறைவன் 'தாயுமிலி தந்தை இலி' 'பிறப்பிலி இறப்பிலி' வேண்டுதல் வேண்டாமை இல்லாதவன் அவன் ஒருவனே!

'தாயாரைத் தந்தை மறந்தாலும்
தந்தை தான் என்று சொல்லாத போதும்
ஏன் என்று கேட்காமல் வருவான் - நம்
எல்லோருக்கும் தந்தை இறைவன்!

(கண்ணதாசன்)

எனக்கு யார் துணை? என்று தவிக்க மட்டும் நமக்குத் தெரிகிறது. விழுத்துணையாக, விழாத துணையாக, என்றும் ஒப்பற்ற துணையாக உள்ள அவனைச் சிக்கெனப் பற்றிக் கொள்ளத் தெரியவில்லை. சத்குருவின் பாடலைப் பார்ப்போம்.

**ஜிங்கலா. (மே.20) ஆதி** (பாடல் 115)

**பல்.** அநாதுடனு கானு ராமநேனு (அநாத)

**அ.ப.** அநாதுடவு நீவநிநிக மஜ்னுல
ஸநாதுல மாட விந்நாநு நேனு (அநாத)

**சரணம்.**
நிராதரவு ஜூஸி யீகலி
நராத முல கேகு
புராண புருஷ புராிபு நுதநா
கராட்சயன தியாகராஜ நுதநேனு (அநாத)

**பொருள்:**

நீ எனக்குத் துணையிருக்க, நான் கதியற்றவன் அல்லன்! நீதான் அநாதன்! (மேல் ஒரு தலைவன் இல்லாதவன்) வேத ரகசியமறிந்த ஞானிகள் இதைச் சொல்லுவர்.

எனக்கு ஆதரவாகக் கலியுகத்தில் யாருமில்லை என்று கீழ்மக்கள் என்னை அநாதை என்கிறார்கள்! புரமெரித்த சிவனால் துதிக்கப் படுபவனே! நாகராஜன் மீது பள்ளி கொண்டவனே! நான் அனாதையல்லன்.

## புறமும், அகமும்

தியாகராஜ சுவாமியின் புறத்தோற்றத்தை அவர்தம் திருவுருவப் படத்தை வைத்துச் சொல்லலாம்! உயரமான, மெலிந்த தேகம், பரந்த நெற்றி, மார்பில் துளசிமணி மாலையும், முப்பரி நூலும், கையில் ஜபசூத்ரம், தொங்கும் தம்புரா, கையில் சிப்ளாக்கட்டை நெற்றியில் கோபிசந்தனம் இதையாரும் சொல்லி விடலாம் இவை நாம் அறிந்தது.

| | | |
|---|---|---|
| தேகமே | - | கோவில் |
| மனமே | - | பீடம் |
| தியானமே | - | கங்காஸ்நானம் |
| அபிமானமே | - | பொன்னாடை |
| புகழ்வாக்கே | - | வாசனைப் பொருள் |
| ஸ்மரணையே | - | நன்மலர்கள் |
| பக்தியே | - | விளக்கு |
| முன்வினைப்பயனே | - | எரிக்கும், புகைக்கும் சாம்பிராணி தீபம் |
| பூஜைபலனே | - | நைவேத்யம் |
| தரிசனமே | - | அகண்ட தீபாராதனை |
| ஆத்மானந்தமே | - | தாம்பூலம் |

என்று அவர் தன்னை மறந்து இராமனுடன் கலந்து வாழ்ந்தது நாம் அறியாததொன்று.

தான், தன்னுடையது, தனக்கு என்று சுயநலம் கொண்டு வாழ்பவர் உள்ளம் கடுகு உள்ளம், உலகம் இன்புற்று வாழ எண்ணும் உள்ளம் கடல் உள்ளம், பகவான், சிவபெருமான் தியாகராஜன், தனக்கு எதுவும் வேண்டாத சத்குருவும் தியாகராஜன் கடல் எதையும் தனக்காக வைத்துக் கொள்வதில்லை. மீன், முத்து, பவளம், ஏன் இறந்த உயிரைக் கூட வெளியே தள்ளிவிடும். நம் ஸ்வாமிகளும் கருணைக் கடல்தான்! நாம் அறிந்து பிறர் மெச்ச வேண்டும் என்று வாழ்வது பகட்டு வாழ்வுக்காகக் கடன் வாங்குவது. வீண்கர்வப்படுவது இது எதுவுமே சத்குரு அறியாதது!

**ஹரிகாம்போதி** **ரூபகம்** (பாடல் 235)

**பல்.** ராம நன்னுப் ரோவரா
வேம கோ லோகாபி

**அ.ப.** சீமலோ ப்ரம்மலோ சிவகேசவாது லலோ!
ப்ரேம மீற மெலகுசுண்டே பிருதுவஹிஞ்சின சீதா
(ராம)

**சரணம்.**
மெப்புலகை கந்நதாபு
நப்புபடக வீர்றவீகி
தப்பு பநுலு லேகயுண்ட
த்யாகராஜ றுதஸீதா (ராம)

பொருள்:

எறும்பு முதல் பிரம்மன் வரையுள்ள ஜீவராசிகளிலும் சிவன், கேசவன் முதலிய கடவுளரிடமும் பரந்து விளங்கும் ஸீதாராமனே! உலகத்தோர் உள்ளம் கவர்ந்த நீ என்னைக் காக்க வரமாட்டாயா? நான் பகட்டிற்காகக் கண்ட இடத்தில் கடன் படாமல் இருக்கின்றவன், கர்வ மடைந்து தீய செயல்களைச் செய்யாதவன் நான், இந்தத் தியாகராஜனால் வணங்கப் படுபவன் நீ!

பகட்டு, கர்வம் இவை சத்குரு அறியாதவன்! நாமோ இவையே வாழ்க்கை என்று நினைக்கின்றோமே!

**"போதும் என்ற மனம்!"**

நமது முன்னோர்கள் 'செல்வம் நிலையாது என்று அடிக்கடி நினைவு படுத்தினார்கள்! ஏன்? தெரியுமா? நிலையில்லாத செல்வத்தை நிலைத்து நிற்கும் தர்மமாக, தானமாக, கொடையாக, புண்ணியமாக மாற்றிக்கொள். என்று சொல்வதற்குத் தான்! யாக்கை நிலையற்றது என்று அடிக்கடி சொன்னார்கள்! ஏன்? பயமுறுத்த அல்ல! நிலையில்லா யாக்கையை விட்டு ஆத்மா, உயிர் நிலைத்து இறைவனிடம் சேர நல்ல விதமாக, நல்லவனாக, புண்ணியவானாக வாழ்க, என்று அறிவுறுத்தவே. 'தர்மம் சர, சத்யம்வத' என்று சொன்னதும் 'செல்வத்துப் பயனே ஈதல்' என்றதும் நமக்கு நல்வழி காட்டவே! ஏழை எளியோரை வாழ வைக்கவே!

" தான் தான் மே லிக்கா ஹை
கான் கான் கா நாம்'' - என்றார் கபீர்தாஸ் ஒவ்வொரு தானியத்திலும் அதைச் சாப்பிடும் பேறு பெற்றவன் பெயர் இறைவனால் எழுதப்பட்டுள்ளது.

'வகுத்தான் வகுத்த வகையல்லால் கோடி
தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது'

என்றார் வான் புகழ் வள்ளுவர்.

இறைவன் உனக்கு எழுதியன. தான் நீ அனுபவிக்க முடியும். ஏன் பேராசை? மகான்கள் வரிசையில் ஸ்ரீ த்யாகராஜரும் "நாளை என்பது பற்றிய கவலைகளை விட்டொழித்து நாளை நல்ல நாளாக்கி வாழ்ந்தார். உஞ்சுவிர்த்தி எடுத்து வந்த அன்றைய உபாதானத்தை அன்னமாக்கி, பகவானிடம் திருவமுது கண்டருளச் செய்து (நிவேதனம் செய்து) பாகவதர்கள், சிஷ்ய கோடிகள் இவர்களுக்கும் பகிர்ந்தளித்து, எஞ்சியதைப் பிரசாதமாக உண்டு மகிழ்ந்தார். போதும் என்ற மனமே மிகப் பெரிய செல்வம். அது அவர் அறிந்த மிகப் பெரிய தத்துவம் என்பதை அவர் பாடலே காட்டும்.

**தேசிககோடி ஆதி** (பாடல் 27)

**பல்.** ரூகலு பதிவேலுந்ந - சேரெடு
நூகலு கதிகாநி ஓ மனஸா

(மனமே! பதினாயிரம் ரூபாய் இருந்தாலும் வயிறு நிரப்புமா! ஒரு கொட்டாங்கச்சி நொய் போர்தாதா?

**அ.ப.** கோகலு வெய்யுன்ன கட்டு
கொநுட கொகடே காநி ஓமனஸா

(ஆயிரம் புடவைகள் இருந்தாலும் ஒன்றைத் தானே ஒரு சமயம் கட்டிக் கொள்ள முடியும்)

**சரணம்.**

ஊரேலின் தா பண்டுட
மூடு முரவு தாவு கானி
நூறு பட்சணமுலப்பின எந்தோ
நோடி கந்த கானி
ஏரு நிண்டின பாரின பாத்ரகுதகு
நீருவச்சுகானி ஸாரதருனி
ஹரினி த்யாகராஜ ஸந்துதுநி
மறவனே மனஸா (ரூகலு)

உலகையே நீ வாங்கினாலும் படுக்க 3 முழம் தானே! நூறு பலகாரம் இருப்பினும் வாய் கொண்ட அளவு தானே சுவைக்கலாம். ஆறெல்லாம் வெள்ளம் வந்தாலும் பாத்திரம் கொள்ளும் அளவு தானே நீர் எடுக்க இயலும்! ஹரியை மறந்து விடாதே! (போதும் என்று அவனைத் துதித்து இருப்பாயாக!)

## "சாந்தம்" "சௌக்யம்"

என்ன நடந்தாலும் அது நம் வினைப்பயன் என்று அமைதி கொள்வது அறிவுடையோர் செயல்.

'தொலினே ஜேஸின பூஜாபலமு' நான் செய்த பூஜாபலன் இதுதான்! தீதும் நன்றும் பிறர் தந்து வருவதில்லை! அவரவர் வினைப்பயனை அவரவர் அனுபவித்துத் தானே ஆக வேண்டும்! இப்படி அமைதி கொண்டால், அது தான் பேரின்பம் சாந்தம் என்ற மன அமைதியே பரம சௌக்யம். இதை நன்கு அறிந்து உணர்ந்து பாடினார் நம் சத்குரு.

சாமா ஆதி (பாடல் 302)

பல். சாந்தமுலேகா ஸௌக்யமுலேது
ஸாரஸ தள நயனா

அ.ப.தாந்துனி கைந வேதாந்துனி கைன
(வேதாந்தியாக இருந்தாலும், இந்திரியங்களை வென்றவராயினும் மன அமைதி இல்லாதவர் சுகம் பெற இயலாது.)

'மனிதனாக வாழ்ந்திட வேண்டும்' என்றார் ஒரு கவிஞர் ஏன், நாங்கள் மனிதர்களில்லையா என்று கேட்காதீர்கள். உறுப்பால் மனிதர்தாம்! கோபத்தில் நாயாக, புலியாக, சிங்கமாக, நாகமாக மாறி விடுகிறோமே! 'ஆசை களவு கோபம் கொண்டவன் பேசத் தெரிந்த மிருகம்! தானே!

## எனக்கென்ன பயம்?

நீ இருக்கும்போது, உன்கிருபை இருக்கும் போது எனக்கென்ன மனக்கவலை? இப்படி இருப்பது ஒரு விதபக்தி! கோழி எங்கோ மேய்ந்து கொண்டிருந்தாலும் அதன் பார்வை, நினைப்பு, குஞ்சுகளைப் பற்றியே இருக்கும்! இறைவன் எங்கு இருந்தால் என்ன அவன் பார்வை, அருட்சித்தம் நம்மீது நிச்சயம் இருக்கும். இந்த நம்பிக்கை வந்து விட்டால் போதுமே! கவலை எதற்கு? மாகேலரா விசாரமு? எனக்கேனப்பா விசாரம்? நீ தான் முன்னரே 'உனக்கென்ன பயம்?' என்றும் 'அஞ்சேல்' என்றும் அருள் மொழி தந்து விட்டாயே என்று அவன் மீது பாரத்தைப் போட்டு விட்டு மன அமைதி கொள்கிறார் ஸ்வாமி.

**கமாஸ் (மே.28)  தேசாதி** (பாடல் 240)

**பல்.** ஸீதாபதே நா மனஸுந
ஸித்தாந்தமநி யுன்னானுரா (ஸீதா)

**அ.ப.** வாதாத்மஜாதுல செந்தனே
வர்ணிஞ்சி ந நீ பல்கு லெல்ல (ஸீதா)

**சரணம்.**

ப்ரேம ஜூஸி நாபை பெத்தமனஸுஜேஸி
நீ மஹிம வெல்ல நிண்டார ஜூபி
ஈமஹினி பய மேடி கன்ன மாட
ராம சந்த்ர த்யாக ராஜ விநுத (ஸீதா)

**பொருள்:**

'சீதாபதே! அனுமன் முதலானவர்களிடம் நீ கூறிய வார்த்தைகளை உண்மை என்று என் மனத்தில் கொண்டிருக்கிறேன். என் மீது அன்பு வைத்து, பெரியமனது பண்ணி, உன் மகிமையைக் காட்டி இவ்வுலகில் உனக்கேன் பயம்! என்று உறுதியாகக் கூறிய மொழிகளை நிச்சயம் நம்புகிறேன். இந்த உறுதி வந்து விட்டால் பற்ற வேண்டிய அவன் பதத்தை மட்டுமே பற்றிக் கொள்வோம்!

## சத்குரு அறிந்ததும் நாம் அறியாததும்

'ஜார சோர பஜன ஜேஸிதினா! நான் விட புருஷர்களாக சிற்றின்பப் பிரியர்களையும், திருடர்களையும் போற்றி பஜனை செய்தேனா? அது நான் என்றும் அறியாதது என்றார் சத்குரு நமக்கோ லச்சை இல்லாமல் இச்சகம் பேசுவது தான் தெரியும். தவறுகள் செய்யாத போதும் 'அபராதி தியாகராஜு' என்று தன்னைத் தாழ்த்திப் பேசுவது அவர் அறிந்த விநயம், பணிவு, அது என்றுமே நாம் அறியாதது. நாளைக்கு என்று சேமிக்க அறியாதவர் சத்குரு நமக்கோ நாலா விதத்தாலும் பொருள் சேர்ப்பது தான் தெரியும்.

பந்த பாசத்தில் சிக்கிக் கொள்வது நாம் அறிந்தது தியாகராஜ ஸ்வாமி அறியாதது. நரஸ்துதி செய்வது அவர் அறியாதது. உலகியல் பதவி பெறும் வழி அவர் அறியாதது. ஆனால் **பசி**த்திருந்து **தனி**த்திருந்து விழித்திருந்து இறையருட் பதவி பெறுவது அவர் அறிந்த மார்க்கம். சிஷ்யர்களிடம் பணம் வாங்கிக் கலையைக் காசாக்கும் தொழில் அவர் அறியாதது. நாம் அறிந்தது. நாம் அறிந்திருக்கும் பலவற்றை நம் சத்குரு அறியாமலிருந்தால் இன்று சங்கீத உலகமே, ஏன், **நானிலமே அவரை அறிந்திருக்கிறது.**

# 3. ஒன்பதும் ஒன்றும்

இசையால் வசமாக இதயம் எது!' இறைவனே ஏழிசையாய் இசைப் பயனாய் இருக்கின்றான். காட்டில் விலங்கறியும், கைக்குழந்தை தான் அறியும், பாட்டின் சுவையதனைப் பாம்பு அறியும். என்றார் பாரதி கண்ணனின் குழல் கேட்டு ஜீவராசிகள் எழுது சித்திரம் போல இருந்த படி இருந்ததும் பெரியாழ்வார் அனுபவிப்பார்! தாலாட்டுக் கேட்டவாறு வாழ்வைத் தொடங்கும் மனிதன், ஒப்பாரி கேட்கையில் உலகைவிட்டுப் போகின்றான்.

"கானப்பறவை கலகலெனம் ஓசையிலும்
காற்று மரங்களிடைக் காட்டும் ஒலியினிலும்"

ஆற்றுநீர் சலசலக்கும் ஓசையிலும், ஏற்றமிறைப்பார் இசையிலும், சுண்ணம் இடிப்பார் சுவை மிகுந்த பாட்டிலும் வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள் தாம் ஒலிக்கக் கொட்டும் கும்மிப் பாட்டிலும், எல்லா இசையிலும் நெஞ்சைப் பறிகொடுத்தாராம் பாரதி! இசைக்கு உருகாதவன் இசைக்கு (புகழுக்கு) உரியவல்லன்.

## பக்தியும் இசையும்

உலகத்து மொழிகள் ஒவ்வொன்றுக்கும் ஒரு சிறப்பு இருக்கும் வடமொழி கம்பீரத்துக்குரியது. ஆங்கிலம் வணிகமொழி லத்தீன் சட்டமொழி பிரெஞ்சு தூதுக்குரியது. இத்தாலியம் காதல்மொழி தமிழ் தெலுங்கு இவை இசைக்கும், பக்திக்கும் உரியவை. **'சுந்தரத் தெலுங்கு'** என்றார் பாரதி. இராக தேவதையை ஒவ்வொரு மொழியிலும் ஒவ்வொரு விதமாக அலங்கரித்துப்

பார்த்தனர். கஜல் என்றும் பஜன் என்றும், 'அபங்' என்றும், தேவர் நாமா என்றும் பதம் என்றும், ஜாவளி என்றும், கீர்த்தனை என்றும் எப்படிப் பாடினாலும் ராகதேவதைக்கு ஜீவன் பக்தியே ஒரே மங்கைக்கு 9 கெஜப்புடவை உடுத்தினாலும், 6 கெஜ ஆடை உடுத்தினாலும், பாவாடை தாவணி போட்டுப் பார்த்தாலும், சுடிதார் அணிவித்தாலும், மங்கைக்கு உயிர்தானே முதன்மை! இசைக்குப் பக்திதான். உயிர்!

**தன்யாசி** **ஆதி** (பாடல் 45)

**பல்.** சங்கீத ஞானமு பக்தி வினா
ஸன்மார்க்கமு கலதே மனஸா

**அ.ப.** ப்ருங்கி நடேச ஸமீரஜ கடஜ
மதங்க நாரதா துலு உபாஸிஞ்சே (சங்கீத)

**சரணம்.**

ந்யாயான் யயமுலு தெலு ஸுனு ஜகமுலு
மாயா மய மநே தெலுஸுனு துர்குண
காய ஜாதி ஷட்ரிபுல ஜெயிஞ்சி
கார்ய மு தெலுஸுனு த்யாகராஜு நிகே (**சங்கீத**)

**பொருள்:**

ஓமனமே! ப்ருங்கிமுனிவர், நடராஜர், வாயு புத்ரனான அனுமான், அகஸ்தியர், மதங்கர், நாரதர் ஆகியோர் உபாசனை செய்யும் சங்கீத ஞானமும் பக்தியும் இன்று உலகில் வேறு நல்வழி உளது? நியாயம் அநியாயம் தெரிந்தும், உலகம் மாயை என்று தெரிந்தும், காமம் முதலிய அறுவகைப் பகைகளை வெல்லும் முறை தெரிந்தும் தியாகராஜனுக்குப் பக்தியுடன் கூடிய சங்கீத ஞானம் தவிர வேறு உய்யும் மார்க்கம் உளதா? சத்குரு பக்தியின் படிகளான ஒன்பது நிலைகளிலும் பாடல் யாத்துள்ளார். அது என்ன ஒன்பது என்று கேட்கிறீர்களா?

1. ஸ்ரவணம் - கேட்டல்
2. கீர்த்தனம் - பாடுதல்
3. ஸ்மரணம் - நினைத்தல்
4. அர்ச்சனம் -அர்ச்சனை நாமம் சொல்லித் தொழுதல்
5. பாதசேவனம் - திருவடிக்குத் தொண்டு செய்தல்
6. வந்தனம் - வணங்குதல்
7. சக்யம் - தோழமை கொள்ளல்
8. தாஸ்யம் - அடிமை எனல்
9. ஆத்மநிவேதனம் - தான் என்பதை விட்டு அவனையே எண்ணுதல்

**ஸ்ரவணம்**

## 1.சுகம் பெற்றார்களே!

ஸ்ரீராமா! உன்னிடம் ஏதோ இன்பம் பெற்று அனைவரும் உன்னையே சூழ்ந்திருக்கின்றனர். அதைக்கேட்டு நாளும் உன்னை அடைந்தேன்.

**அஸாவேரி** **தேசாதி** (பாடல் 31)

**பல்.** லேகநா நிந்நு ஜுட்டு கென்னாரு
ஏக ஹ்ருதயு லை நித்யானந்தமு

**அ.ப.** ஸ்ரீகர கருணா ஸாகர நிருபம்
சிந்மய ஸ்ரித சிந்தாமணி நீ யெட

**சரணம்.**

1. ஸௌந்தர்ய முலலோ ஸுகமு ஸீதம்மித
ஸௌமித்ரிகி கநுல ஜாடலோ ஸுகமு
2. ஸுந்தர முக முந ஸுகமு பரதுநிதி
ஸுக்ஞான ரூபமுந ஸுகமு ரிபுகநிகி
3. சரண யுகமுநந்து ஸுகமாஞ்சனேயு நிகி
வரகுண த்யாக ராஜ வரதானந்தமு

**பொருள்:**

உன்னிடம் நிரந்தரமான இன்பம் இல்லாமலா எல்லோரும் உன்னைச் சூழ்ந்து கொண்டவர்கள்? செல்வம் அளிப்பவனே! கருணைக்கடலே! ஒப்பற்றவனே! சின்மயனே! சிந்தாமணியே!

உன் பேரழகில் அன்னை சீதாப்பிராட்டிக்கு சுகம் இலக்குவனுக்கு உன் கண் ஜாடையைப் புரிந்து கொள்வதில் இன்பம்!

உன் அழகிய முகம் போதும் பரதனுக்கு உன் ஞான முகத்தியானம் சத்ருக்கினனுக்கு இன்பம்.

ஆஞ்சனேயனுக்குச் சரணசேவை சுகம்! தியாகராஜனுக்கு உன் வரமே ஆனந்தம் தரும்! இவை கேட்டு உன்னை நாளும் பற்றி நிற்கின்றேன்.

## 2. கீர்த்தனம்

பகவானுடைய கீர்த்தியைப் பாடுவது கீர்த்தனம் எத்தனையோ பாடல்களில் பகவான் புகழையே பாடுகிறார் சத்குரு! ஒன்று காணலாம்.

**தன்யாசி** **ஆதி** (பாடல் 44)

**பல்.** ஸ்யாம ஸுந்தராங்க ஸகல
சக்தியுநீ வேரா.

**அ.ப.** தாமஸ ரஹித குண ஸாந்த்ரா
தரநு வெலயு ராமச் சந்த்ரா

**சரணம்.**
துஷ்ட ஜநுல மதவி தார
சிஷ்ட ஜன ஹ்ருதய விஹார
இஷ்ட தெய்வமு நீவேர
இலனு த்யாக ராஜு வேரா (ஸ்யாம)

**பொருள்:**

முகில்வண்ணனே! நீயே சகல சக்தியும்! தமோ குணமில்லாத குணக்கடலே! இராமனே! கொடியவரின் மதத்தை அடக்குபவனே! நல்லோர் உள்ளத்தில் உறைபவனே! என் இஷ்ட தெய்வமே! இந்த தியாகராஜனிலிருந்து நீ வேறுபட்டவனா? உன்னிலிருந்து நான் வேறுபட்டவனா!

**பொருள்:**

சீதாதேவியாம் ஸ்திரீ ரத்தினம் லட்சுமணன், பரதன் ஆகியோருடன் கூடிய ஸ்ரீராமனின் கதை அமிர்தம். தர்மம், அர்த்தம், காம, மோட்சம் என்ற நான்குவகைப் புருஷார்த்தமும் நல்க வல்லது. தைரியம், ஆனந்தம், சுகம், தரவல்லது.

பழவினைகளின் விளைவான தாபக் கடல் கடக்க உதவும் தோணியானது.

கலியுகத்தின் பாவங்களைப் போக்க வல்லது (ராம சரிதம் என்னும் அமிர்தமே!)

**அர்ச்சனை (அர்ச்சனம்)**

அவன் புகழ் பாடி, அவன் நாமங்களைச் சொல்லி மலரால் அர்ச்சிப்பது ஒரு வழிபாடு! 'மார்வம் என்பதோர் கோவில் அமைத்து, மாதவன் எனும் தெய்வத்தை நாட்டி, ஆர்வம் என்பதோர் பூவிட வல்லார்க்கு, அரவதண்டத்தில் உய்யலும் ஆமே! 'என்றார் பெரியாழ்வார். ஸ்ரீராமா ஜயராமா, ஜானகிராமா, கோதண்ட ராமா, பட்டாபிராமா, லாவண்யராமா, சுந்தரராமா இப்படி நாமம் சொல்லி மகிழலாமே! ஸ்ரீத்யாகராஜ ஸ்வாமிதான் எத்தனை விதமாக அவரை அழைக்கிறார்! அவர் தான் சத்குரு.

"குருவே சில்லகிஞ்ச, குருவே ப்ரமரமு
குருடே பாஸ்கருடு,

(தன்யாசி ராகத்தில்) (பாடல்42)

(நீ சித்தமு நிர்மலமு)

குரு சேற்று நீரைத் தெளிய வைக்கும் தேத்தாங்கொட்டை புழுவை வண்டாக மாற்றும் தேன்வண்டு அவரே! அஞ்ஞான இருளை ஓட்டும் ஞான சூர்யன் அவரே! ஒரு சில பாடல்களை, சில அடிகளைப் பார்த்தால் சத்குரு எத்தனை அழகாக ஸ்ரீ ராமனை அர்ச்சித்திருக்கிறார். என்பது புரியும்:-

**ஹுசேனி** **ரூபகம்** (பாடல் 216)

**பல்.** ரகு வீர ரண தீர ராரா ராஜகுமார!

**அ.ப.** ப்ருகு ஸுனு மத விதார
ப்ருந்தார காதார

**சரணம்.**
ராவண கடகர்ண பலா
ராதி ரிபு நக நகாரி
ஸ்தாவர ஜங்கம் ரூப த்யாகராஜ ஹ்ருச்சாரீ

**பொருள்:**

ரகுவீரனே! போரில் தீரனே! ராஜகுமாரனே! பரசுராமன் கர்வத்தை அடக்கியவனே! தேவருக்கு ஆதாரமானவனே! இராவணன், கும்பகர்ணன், இந்திரசித்தன் ஆகிய மலைகளைத் தகர்ப்பதில் இந்திரன் ஒத்தவனே! சராசர ரூபமானவனே! தியாகராஜனின் இதயத்தில் நடமாடுபவனே! வருக!

மற்றொருபாடல் இதோ. (பாடல் 555)

**பூர்ணசந்திரிக** **ஜம்ப**

**பல்.** ஸ்ரீ ராம ராம ஜக தாத்ம ராம
ஸ்ரீ ராம ரகுராம பாஹி பரமாத்மா

**சரணம்.**

1. ஜ்யோதிர்மயா கண்ட ரூபராம
பூதேச விநுதாப ஹ்ருத் பக்த தாப

2. ஸர்வ க்ரஹாதார பூதராம
கீர்வாண முனிவந்த்ய ஸுஜநேஷ்டதாத

3. யோகிஜன ஹ்ருதயாப்ஜ மித்ர ராமா
போகி சாயி கருணாரஸ பூர்ணநேத்ர.

**பொருள்:**

ஜகத்திற்கே ஆத்மாவான இராம! என்னைக் காத்தருள்! ஒளிமய உருவம் உடையவனே! அனைத்திலும் நிறைந்தவனே! பூதகணங்களின் தலைவனான சிவனால் வணங்கப் பெறுபவனே! பக்தர்களின் தாபங்களை அகற்றுபவனே! அனைத்துக்கிரஹங்களுக்கும் ஆதாரமானவனே! தேவர்கள், முனிவர்களால் வணங்கப் பெறுபவனே! நல்லோரின் விருப்பங்களை நல்குபவனே! யோகிகளின் உள்ளத் தாமரையை மலர்விக்கும் சூரியனே! நாக சயனனே! கருணாரசம் நிறைந்த கண்கள் உடையவனே!

இப்படி அர்ச்சனை செய்து கொண்டே மகிழலாம்! நீரத நீல, முனீந்த்ரஹ்ருதய, நாரதஸேவித, ஸாரஸ நயன, ஸ்ரீகர ரூப, ஸுதாகரவதன, சோகநிவாரண ஸுந்த ரவதன நிர்மல ரூப, இப்படி இப்படி எத்தனை நாமங்கள்!

## 5. பாதசேவனம்

**அம்ருதவாஹினி (மே.20) ஆதி** (பாடல் 110)

**பல்லவி:** ஸ்ரீராமபாதமா நீக்ருப ஜாலுனே
சித்தா நிகிராவே!

**அ.ப.** வாரிஜபவ ஸநக ஸ்நந்தன
வாஸவ நாரதாது லெல்ல பூஜிஞ்சே

**சரணம்.**

தாரிணி சிலயை தாபமு தாளக
வாரமு கந்நீருநு ரால்சக
சூர அஹல்யனு ஜூஸி ப்ரோசிதா
ரீதி தன்யு ஸேயவே த்யாகராஜ கேயமா.

**பொருள்:**

ஸ்ரீ ராமனின் திருவடியே! உன்கருணை போதுமே என்சித்தத்தில் வந்தடை வாயாக! பிரம்மன், ஸநகர், ஸநந்தனர் இந்திரன், நாரதர் முதலியோர் வழிபடும் ராமபாதமே! கல்லுரு வாகிக் கண்ணீரில் மூழ்கியிருந்த அகலிகையைக் காத்த சூரனே! இந்த த்யாகராஜனையும் காப்பாயாக!

அதிகாலையில் எழுந்து இறைவனுக்குப் பன்னீரால் திருமஞ்சனமாட்டி, தம்பூர் மீட்டி, அவனுடைய திவ்ய குணங்களைப் பாடி, கொலு விருக்கச் செய்தார் சுவாமிகள். என்பதற்குத் தோடி ராகத்திலமைந்த கொலுவ மரெகதா கோதண்டபாணி' என்ற பாடல் விளக்கம் தரும்!

**பைரவி** **ஆதி** (பாடல் 102)

**பல்.** உபசார முலநு சேகொன வய்யா
உரக ராஜ சயன.

*அ.ப.சபலா கோடி நிபாம்பரதரஸ்ரீ*
ஜானகி பதி தய சேஸி நாது.

**சரணம்.**

கபட நாடக சூத்ர தாரிவை
காமித பலமு நொஸங்கே ராம
அபரிமித நவரத்ன முலு பொதிகின
அபரஞ்சி கொடுகு நீகே தகு நய்ய.

கருணையோடு நான் செய்யும் உபசாரங்களை ஏற்றுக்கொள். மின்னலை ஒத்த பீதாம்பரம் அணிந்தவனே! சீதா நாயகனே! ஆதிசேடன் மீது பள்ளி கொண்டவனே! கபடநாடக சூத்ரதாரியானவனே! விரும்பிய பலன்களை அளிப்பவனே! இந்த நவரத்னமிழைத்த பொற்குடை உனக்கே தகும்! என்றெல்லாம் திருவடிப் புகழ்ச்சி பாடுகிறார்!

## 6. வந்தனம்

சுவாமி! உன்னை நான் எப்படி வணங்குவது! சீதை, லட்சுமணன் இவர்களிடம் கேட்கிறேன். என்று சுவாமிகள், கரகரப்ரியா விலமைந்த பக்கல நிலபடி என்ற புகழ் பெற்ற கீர்த்தனையில் பாடியுள்ளார்! இவர்கள். சாஷ்டாங்க நமஸ்காரம் செய்கிறார்களா? பக்தியுடன் நாம சங்கீர்த்தனம் செய்கிறார்களா? மனத்திலிருத்தி மெய்ம் மறந்து போகிறார்களா என்ன மர்மம்? என்று வியந்த சத்குரு.

**சஹானாவில் பாடுகிறார்.** (பாடல் 606)

**பல்.** வந்தனமு ரகுநந்தன சேதுபந்தன
பக்த சந்தன ராம.

அ.ப.ஸ்ரீதமா நாதோ வாதமா நே
பேதமா இதி மோதமா ராம

**சரணம்.**

1. ஸ்ரீ ராம ஹ்ருச் சாரமா ப்ரோவ
பாரமா ராய பாரமா ராம

2. வேகரா கருணா ஸாகரா ஸ்ரீ
த்யாக ராஜு கி ஹ்ருதயாகர - ராம

**பொருள்:**

இரகுநந்தன! சேது அணை கட்டியவனே! பக்தர்களுக்குச் சந்தனம் போல் குளிர்ச்சி தருபவனே உனக்கு வந்தனம் செல்வங்கள் தருபவனே என்னுடன் வாதமா! நீவேறா நான் வேறா! இது உனக்கு மகிழ்ச்சி தருகிறதா?

திருமகள் உள்ளத்தில் உறைபவனே! என்னைக் காப்பது பாரமா? விரைந்துவா கருணைக் கடலே! தியாகராஜனின் மனத்தில் குடிகொண்டவனே!

## 7. சக்யம் - தோழமை

இறைவனைத்தாய், தந்தை, குழந்தை, ஆண்டான், காதலன் என்றெல்லாம் வழிபடுவதை விடத் தோழமை கொள்ளும் சக்யம் என்ற பாவம் சற்றுக்கடினம். அதிகமாக உறவு கொண்டு பேசும் நட்பு உலகியலுக்குச் சரிப்படலாம். அருளியலில் அது மற்றவர் பார்வையில் சரியாகப்படுமா? சுந்தரர், சிவபெருமானின் தோழர் (தம்பிரான் தோழர்) அர்ச்சுனன், கண்ணபரமாத்மாவின் ஆருயிர் நண்பன் நரநாராயணர் என்றே இருவரும் அழைக்கப்படுவர். தோழனிடம் விளையாடலாம், கேலி பேசலாம். "சங்கிலி நாச்சியாருக்காக என் கண்ணைப் பறித்தாயா! "நீரே வாழ்ந்து போதிரே!"

"இவரலாது இல்லையோ பிரானார்? "என்றெல்லாம் விஞ்சு தமிழ் பாடினார் சுந்தரர். "உன் தங்கை சுபத்ரை என் ஆசைக்குரியவளாக, மனைவியாக, நான் அவளை அடைய ஒரு வழி சொல் கண்ணா!" என்று நண்பன் கண்ணனிடமே உபாயம் கேட்டான் பார்த்தன்! சத்குருவும் இராமனிடம் கேலி பேசுகிறார், சிவனிடம் கிண்டல் செய்கிறார். இதுவும் அற்புத ரசம் தான்!

பெயர் எல்லாருக்கும் பொருந்திவிடுமா? தனலெட்சுமி என்ற பெயருள்ள பெண் தரித்ரமாக இருப்பதும், ஆரோக்கியசாமி வருடம் முழுதும் நோயாளியாக இருப்பதும், மண்டுவாக இருப்பவள். சரஸ்வதி என்ற பெயர் கொண்டிருப்பதும் உண்டே! அப்படித் திருவையாற்றுப் பஞ்ச நதீஸ்வரருக்கு யார் ப்ரணதார்த்தி ஹரன் என்று பெயர் வைத்தார்களோ என்று கிண்டலாகப் பாடுகிறார் நாதயோகி ப்ரண தார்த்தி ஹரன் என்றால் வணங்குபவர் துயரைத் தீர்ப்பவன் என்று பொருள்.

**அடாணா ஆதி** (பாடல் 475)

**பல்.** இலலோ ப்ரணதார்த்தி ஹருடனுசுபே
ரெவரிடிரே சங்கருடநி நீ (கி)

**அ.ப.** தலசி கரகிசிர காலமு பதமுந
தண்டமிடிந நாயெட தயலேதாயெ

**பொருள் :**

வணங்குபவர் துயர் தீர்ப்பவன் என்றும் நலம் புரிபவன் என்றும் உனக்கு யாரப்பா பெயரிட்டார்கள்!

உன்னையே நினைத்து வெகுகாலம் உன் திருவடிகளில் தண்டனிட்ட என்னிடம் உனக்குத் தயை இல்லையே!

கதைகளை அழகாகக் கீர்த்தனைகளில் சேர்ப்பது சத்குருவுக்கு மிகவும் விருப்பம் இராமாயணம், பாரதம் புராணங்கள் இவற்றின் சாரங்களை இவர்தம் கீர்த்தனைகளில் காணலாம். "ஸ்ரீராம, உன் திருவடியை வேண்டியாராவது சுகமடைந்திருக்கிறார்களா என்ன? (நான் உள்பட) சீதாப்பிராட்டி உன்னை மணந்தாள். காட்டிற்குப் போனாள்! சூர்ப்பனகை விரும்பி வேண்டி மூக்கறுபட்டாள். இதுமட்டுமா! நாரதர் வரம்கேட்கப் போய்ப் பெண்ணுருவை ஏற்க நேர்ந்தது. துர்வாசர் அன்னம் கேட்கப் போய் வயிறே மந்தமாகி விட்டது. தேவகி உன்னை மகனாகப் பெற ஆவல் கொண்டாள். வளர்க்கும் பாக்யமோ யசோதைக்குப் போனது கோபிகைகள் உன்னிடம் பற்று வைக்க, கணவன் மார்களையே துறக்க நேர்ந்தது. உனக்கே தயை பிறந்து

காப்பாயோ மாட்டாயோ? உன் இரகசியம் தான் தெரிந்து விட்டதே! என்ன மாயையிது? இந்தப் பாடல் இறைவனிடம் சக்ய பாவத்தில் பாடிய சுவையான பாடல் உருகி உருகிப் பாடிய பாடல்களின் நடுவே இப்படி ஒரு சுவை மாற்றத்தை வைத்த சத்குருவின் கவித்வ அழகே அழகு! இனி, பாடலைப் பார்ப்போம்.

**மத்யமாவதி (மே. 22) ரூபகம்** (பாடல்185)

**பல்.** அடிகி ஸுகமு லெவ்வ ரநுப விஞ்சிரிரா
ஆதி மூல ராம

**சரணம்.**

1. ஆஸ்ரயிஞ்சி வரமடிகின ஸீதா
அடவி போ நாயெ

ஆசர ஹரண ரக்கஸி இஷ்டமடுக
அபுடெ முக்கு போயெ ஓராம நின்னடிகி

2. வாஸிக நாரத மௌனி வரமடுக
வநித ரூபுடாயெ

ஆஸிஞ்சி துர்வா ஸுடந்நமடுக
அபுடெ மந்த மாயெ ஓராம நின்னடிகி

3. ஸுதுநி வேடுக ஜுட தேவகி யடுக
யசோத ஸுட நாயெ.

ஸது வெல்ல ரதி பிக்ஷமடுக வாரிவாரி
பதுல வீட நாயெ ஓராம நின்னடிகி

4. நீகே தயபுட்டிப் ரோதுவோ, ப்ரோவவோ
நீ குட்டு பயலாயெ

ஸாகேத தாம ஸ்ரீ த்யாக ராஜ னுத
ஸ்வாமி ஏடி மாயா ஓராமா நின்னடிகி ஸுகமு

## 8. தாஸ்யம் அடிமைத்திறம்

இறைவனே தலைவன். அவனே ஆண்டான் அவன் தலைமையில் நாம் பணிந்திருப்பது, தாசர்களாயிருப்பது அடிமை என்பது பெருமை தான்! 'ஊனேறு செல்வத்து உடற் பிறவி யான் வேண்டான், ஆனேறு ஏழ் வென்றான் **அடிமைத்** திறமல்லால்', என்றார் குலசேகரப் பெருமாள்! 'தன் கடன் அடியேனையும் தாங்குதல், என் கடன் பணி செய்து கிடப்பதே' என்றார் அப்பர் சுவாமி 'மீளா அடிமை உமக்கே என்றார் சுந்தரர் அவன் சக்கரவர்த்தித் திருமகன், அவனுக்கே நான் அடிமை என்று ஆவலாகப் பாடினார் சத்குரு.

புன்னாகவராளியில் அமைந்த தவதாஸோஹம், தவதாஸோஹம் தவதாஸோஹம் தாசரதே பாடல்பலரும் விரும்பிப் பாடுவது. நான் உனக்கு அடிமை என்று மும்முறை அழுத்திச் சொல்கிறார்!

"தரநீவண்டி தைவமு லேதண்டி
சரணனு கொண்டி - தாசரதே.

"ஆகம விநுது ராகவிரஹித
த்யாகராஜ நுத தாசரதே"

இந்தப் பூமியில் உன்னைப் போன்ற தெய்வமில்லை நான் உன்னையே சரண் அடைந்தேன். நீ மறைகளால் போற்றப்படுபவன். பற்று இல்லாதவன் த்யாகராஜன் வணங்கும் தாசரதீ! (நீயேசரண்)

'நின்னைச் சரணடைந்தேன்' என்றார் பாரதி
"பொன்னை, உயர்வை, புகழை விரும்பிடும்
என்னைக் கவலைகள் தின்னத் தகாதென்று - நின்னை"

கவலையற்ற வாழ்க்கை, தூயவாழ்க்கை, பயனுள்ள வாழ்க்கை அமைய அவனே புகலிடம். "சர்வதர்மான் பரித்யஜ்யமாம் ஏகம் சரணம் வ்ரஜ! "என்றான் கீதாசார்யன் அப்படியே சரணாகதி செய்தார் நம் சத்குரு.

## 9. ஆத்ம நிவேதனம்

தன்னையே அவனிடத்தில் தருதல் ஆத்ம நிவேதனம் "தந்தது உன்தன்னை, கொண்டது என்னை" என்றார் மணிவாசகர். நாம் நம்மைத் தந்தால் அவன் தன்னையே தருவான்! 'உன்கையில் பிள்ளை உனக்கே அடைக்கலம் என்று நம்மை அவனிடம் ஒப்படைத்து விடுவது மிகச் சிறந்த பக்தி நிலை. பல பாடல்களில் இந்த பாவத்தை ஸ்வாமி காட்டியுள்ளார். ஓரிரு எடுத்துக் காட்டுக்கள் தருகிறேன்.

**அஸாவேரி** **தேசாதி** (பாடல் 636)

**பல்.** ராராமா யிண்டிதாக ரகு வீர
சுகுமாரம் ஸாக்கேரா

**அ.ப.** ராரா தசரதகுமார நந்நேலு
கோரா தாளலேரா............ராமா

**சரணம்.**

திக்கு நீ வனுசு தெலிஸி நன்னுப்ரோவ
க்ரக்குன்ன ராவு கருணாநு நீசே
ஜிக்கி யுந்ந தெல்ல மறதுரா இக
ஸ்ரீ த்யாக ராஜுநி பாக்யமா. (ரா)

**பொருள்.**

என் இல்லத்திற்கு எழுந்தருள்வாய்! ரகுவீரனே! அழகனே! உன்னை வணங்குகிறேன். வருக வருக! தசரத குமரனே! என்னை ஏற்றுக்கொள் நான் இனித்தாளேன்!

எனக்கு நீயேகதி, நான் உன் கையில் சேர்ந்த வஸ்து உன்னிலே சேர்ந்தவன். கருணையுடன் வாராயோ! மறந்தனையோ! தியாகராஜனின் பாக்யமே!

மற்றொரு பாடல் இதோ.

**பந்துவராளி** **ரூபகம்** (பாடல் 413)

பல். நிந்நே நெற நம்மிநா நுரா
ஓ ராமா! ராமய்யா!

அ.ப.அந்நி கல்ல லநுசு ஆடி பாடிவேடி
பந்நக சயன நே சின்ன தனமு நாடே

இராமா! இராமய்யா! உன்னையே முழுதுமாக நம்பினேன். அனைத்தும் மாயை என்றுணர்ந்து, ஆடிப்பாடி, வேண்டி, சிறுவயது முதல், உன்னையே நம்பினேன் - என்கிறார்!

சினந்தென்னை அடித்தாலும் பரிந்தெடுத்து அணைத்தாலும் என்ன செய்தாலும் என் துணை நீயே! என்று "**எல்லாம் அறத் தன்னை இழந்த நலம்** கொண்டிருந்தார் ஸ்ரீ த்யாக பிரம்மம்!

பக்தியின் **ஒன்பது படிகளான** ஸ்ரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், அர்ச்சனம், பாதசேவனம், வந்தனம், ஸக்யம், தாஸ்யம், ஆத்மநிவேதனம் என்ற அனைத்து நிலைகளிலும் த்யாக பிரம்மத்தின் கீர்த்தனைகள் இருப்பதைக் கண்டு கேட்டு அனுபவிக்கிறோம். இந்த நிலைகள் அனைத்தும் **ஒன்றும்** இடம் **ஒன்று** அதுதான் இறைவன் ஸ்ரீராமன். நம் மனம் **ஒன்றும்** இடம் அவனே! ஜீவாத்மாக்கள் **ஒன்றும்** தலைவன் பரமாத்மாவே! ஆக **ஒன்பதும் ஒன்றும்** என்று மகுடமிட்டேன்.

# 4. ராமபக்தி சாம்ராஜ்யம்

'ஈ ஜகமந்த ராமமயம்' - உலகமே ராமமயம். என நல்வாழ்க்கை வாழ்ந்தவர் சத்குரு ஸ்ரீ த்யாக பிரம்மம். 'இருக்கினும் நிற்கும் போதும் இரவு கண் துயிலும் போதும் பொருக்கென விழிக்கும் போதும், பொருந்தி ஊண் துய்க்கும் போதும்' இராமனையே சதா நினைத்தவர்!

இன்று உலக முழுதும் சத்குருவின் கீர்த்தனைகள் பரவியிருக்கக் காரணம் சிஷ்ய பரம்பரையினரே!

1. தில்லைத்தானம் - ராமய்யங்கார்
2. தஞ்சாவூர் - ராமாராவ்
3. திருவெற்றியூர் - வீணைகுப்பையர்
4. திருவையாறு - ஐயாபாகவதர்
5. வாலாஜாபேட்டை - வெங்கட்ராமண பாகவதர்
6. மானம்புச்சாவடி - வெங்கட சுப்பையர்
7. லால்குடி - ராமய்யர்
8. உமையாள்புரம் - கிருஷ்ணபாகவதர்
   சுந்தர பாகவதர்
9. கும்பகோணம் - அராவயமுதய்யங்கள்
10. நெய்க்காரபட்டி - சுப்பையா
11. சுந்தரமய்யர்
12. அமிர்தலிங்கம்
13. நேமம் சுப்பராமய்யா
14. நங்கவரம் நீலகண்டய்யா
15. ஸொஜிரி சீதாராமய்யா
16. கிருஷ்ணபாகவதர்
17. கன்னையா பாகவதர்

'யாகயோகத்யாக போக பலமொஸஸ்கே' என அனைத்து நலன்களையும், பலன்களையும் தரவல்ல ராக, நாதயோகம் செய்து வந்தவர் சத்குரு! பின்வரும் இரண்டு கீர்த்தனைகளைப் பாருங்கள்.

**பந்துவராளி** **ஆதி** (பாடல் 415)

**பல்.** வாடேரா தெய்வமு மனஸா

**அ.ப.**ஆடின மாடலு தப்பட நுசுநு
ஆசந்த்ரார்க்கமுக கீர்த்தி கல்கிந

**சரணம்3.**

தாத்ரு விநுதுடைந த்யாக ராஜுனி
சேதி பூ ஜலந்தி பாகுக ப்ரத்
யோத நாந்வயமுநநு ஜெனிஞ்சி
ஸீதாபதியனி பேருகலிகிந (வாடேரா)

**பொருள்:**

மனமே! அவனே தெய்வம்! 'கொடுத்த வாக்கை மீறாதவன் என்று சந்திர சூரியர் உள்ளளவும் புகழ் பெற்ற அவனே பரதெய்வம்' நான் முகன் வணங்கும் பரமசிவனால் பூஜை செய்யப் பெற்று, சீதை நாயகன் என்ற திரு நாமத்துடன் விளங்கும் அவனே பரதெய்வம்.

ஸ்வாமி ராமகிருஷ்ணர் பக்தியைக் குறித்து ஒரு நிகழ்ச்சி சொல்லுவார்! ஒருவன் ஓரிடத்தில் 20 அடிக்குக்கிணறு தோண்டினாலும். தண்ணீரே வரவில்லை, பிறகு அடுத்த இடத்தில் 20 அடி வெட்டினாலும்- அங்கும் நீர்வரவில்லை இப்படிப் பத்து இடத்தில் தோண்டினானாம்!

“அடே! புத்திசாலித்தனமாக ஒரே இடத்தில் 10x20=200 அடி தோண்டியிருந்தால் வெள்ளமாக நீர் வந்திருக்குமே!” என அறிவுள்ளவன் நினைவூட்டினானாம்! அதுபோல் ஒரே நாமம், ஒரே ரூபம், பற்றிக் கொள்வது பக்திக்கு ஆழம், அழுத்தம், பேறு எல்லாம் தருமே!

‘ராமநாம ரஸ பீஜை மனுவா’ - என்றார் மீராபாயி
‘நற்றவா உன்னை நான் மறக்கினும்

சொல்லும் நா நமசிவாயவே!’ என்றார் சுந்தரமூர்த்தி சுவாமிகள்.

‘நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன் நாராயணா என்னும் நாமம்-’’ என்றார் திருமங்கையாழ்வார்’’. இவ்வாறு த்யாக பிரம்மமும் ராம நாமம், ராமரூபம், ராம குண கானமே உறுதியாய்ப் பற்றிக் கொண்டார். அந்த ராம பக்தி சாம்ராஜ்யத்தில் தன்னை நிலை நிறுத்திப் பேரின்பம் கண்டு கானத்தின் வழி நமக்கும் காட்டினார்

**ஹரிகாம்போதி** **ரூபகம்** (பாடல் 229)

**பல்.** உண்டேதி ராமு டொகடு
ஊரக செடி போகு மனஸா

**அ.ப.** சண்ட மார்த்தாண்ட மத்ய
மண்டல முநநு செலங்குசு

**சரணம்.**

தாமஸாதி குணரஹிதுடு
தர்மாத்முடு ஸர்வஸமுடு
க்ஷேம கருடு த்யாகராஜ
சித்த ஹிதுடு ஜகமு நிண்டி (உண்டேதி)

**பொருள்:**

மனமே! உலகம் முழுதும் ஸர்வ வியாபியாய் நிற்கும் பரம் பொருள் இராமன் ஒருவன்! வேறு வழி சென்று கெட்டுப் போகாதே! சூர்யமண்டலத்தில் ஒளியுடன் திகழ்பவன் அவன்! தாமஸம் முதலான குணங்களற்றவன் தர்மாத்மா, அனைவர்க்கும் சமம் ஆனவன். நன்மை தருபவன். த்யாகராஜன் மனத்திற்கு இதம் அளிப்பவன்!

'பக்தியே சகல சக்தியும் என்றார் பாரதியார்! அந்தப்பக்தி எதைத்தான் சாதிக்காது! அது மிகப்பெரியது! வலிமையானது இராமபக்தி மிகச் சிறந்தது. கண்ணை இமை காப்பதுபோல் நம்மைக் காக்க வல்லது. லட்சுமிதேவி அந்தப் பக்தியினால் பகவானையே பாதம் பற்றி நின்றாள். லட்சுமணன் தொண்டு புரிந்தான். சபரி எச்சில் படுத்திச் சுவை பார்த்துப் பழங்களைத் தந்தாள். சிவபெருமான் கொண்டாடினார். சுயம் பிரபைக்குப் பதம் கிடைத்தது. குரங்குகள் கடலில் அணைகட்டின. யசோதை கண்ணனை உரலில் கட்டினாள். த்யாகராஜனுக்குப் பிரம்மானந்தம் கிடைத்தது. இத்தனையும் பக்தியினால், இராம பக்தியினால் தானே! எவ்வளவு அழகாக எடுத்துக் காட்டுத் தருகிறார் பாருங்கள்.

**பந்துவராளி (மே.51) ரூபகம்** (பாடல் 412)

**பல்.** அப்பராம பக்தி யெந்தோ கொப்ப ராம

**அ.ப.** த்ரிப்படலனு நில்பி கண்டி
ரெப்ப வலனு காசு நா மா (மாயப்ப!)

**சரணம்.**

1. லக்ஷ்மி தேவி வலசுநா
லக்ஷ்மணுண்டு கொலுசுநா
ஸூக்ஷ்ம புத்தி கல பரதுடு
சூசி சூசி ஸொல ஸூ- (மாயப்ப)

2. "சபரி யெங்க லிச்சுநா
சந்த்ர தருடு மெச்சுநா
அபல ஸ்வயம் பிரபுகு - தைவம்
அசல பதவி நிச்சுநா- (மாயப்ப)

3. கபி வாரிதி தாடுனா
கலி கிரோட கட்டுநா
அபராதி த்யாகராஜூகு
ஆனந்தமு சாடு நா (மாயப்ப!)

சத்பக்தியுள்ள நல்லவர்களைப் பார்த்தல், கேட்டல் அவரோடு இணங்கியிருத்தல் மிக அவசியம். தமிழில் நாடகக் கீர்த்தனை எழுதியவர்களில் சீர்காழி அருணாசல கவிராயர். மாயூரம் கோபாலகிருஷ்ண பாரதியார், வையச்சேரி ராமசாமி சிவன், இவர்கள் பிரபலமானவர்கள். ஒருமுறை கோபாலகிருஷ்ண பாரதியார் திருவையாறு வந்து சத்குருவைத் தரிசித்தாராம். ஸ்வாமி அவரைப் பார்த்து "பெரியவாளுக்கு எது ஊர்?" என்று வினவ. "அடியேன் மாயூரம்" என்றாராம். 'மாயூரத்தில் நந்தன் சரித்திரக் கீர்த்தனை பாடிய பெரியவர் கோபாலகிருஷ்ண பாரதியாரைத் தெரியுமோ?' என்று சத்குரு கேட்டதும் பணிவாக, 'அடியேன்தான்' என்றார் பாரதியார், "மகிழ்ச்சி ஆபோகியில் ஏதாவது பாடல் இயற்றியிருக்கிறீர்களோ!" என்று சுவாமி கேட்கத் தலையை அசைத்து 'இல்லை,

இனிமேல் தான்!' என்றாராம் காவிரியில் குளித்து விட்டுப் படி ஏறும் போதே ''சபாபதிக்கு வேறு தெய்வம் சமானமாகுமா?'' என்ற பாடல் இயற்றி விட்டாராம் சத்குருவின் அருட்கடாட்சம் பெற்ற பரிசு என மகிழ்ந்து பணிந்து பாடிக் காட்டினாராம் கோபாலகிருஷ்ண பாரதியார்.

கனராக பஞ்சரத்னக் கீர்த்தனைகளை ஸ்வாமி பாடியது குறித்துச் சுவையான நிகழ்ச்சி சொல்லுவார்கள். ஷட்லகால கோவிந்தமாரார் என்பவருக்கு அற்புதமான சாரீரமாம். ஒருநாள் சத்குருவின் திருமுன்பு ஆறு காலத்தில் பல்லவி பாடிநிரவல் செய்து முடித்ததும் சத்குரு எழுந்து அவரைத் தழுவி, **'ஸ்ரீராகத்தில்'** 'எந்தரோ மஹாநுபாவுலு அந்தரிகி வந்தனமுலு' என்று பாட அனைவரும் வியப்பிலும் மகிழ்ச்சியிலும் ஆழ்ந்தார்களாம். பின்னர் கோவிந்தமாராரும், மற்ற அன்பர்களும் வேண்ட, பஞ்சரத்னங்களை உலகிற்கு அருளினார் என்பர்! இசையின்பம், இறையின்பம் இரண்டுமே அநுபவித்தால் தான் புரியும்! சொல்லி விளக்கி விட முடியுமா?

ஒருமுறை வாத்தியக்கார வடிவேலு என்ற வயலின் வடிவேலு வந்து, ''ஸ்வாதித்திருநாள் மகாராஜா மிகப்பெரியரசிகர் அவரே ஸாஹித்ய கர்த்தா. அவரது சபைக்கு நீங்கள் வந்தால், அவர் தன் சாம்ராஜ்யத்தையே தங்களுக்கு அளித்து விடுவார்'' என்று அழைத்த போது சத்குரு பாடியதாம் பின்வரும் பாடல்.

**சுத்தபங்காள** **ஆதி** (பாடல்209)

**பல்லவி.** ராம பக்தி சாம்ராஜ்ய
மே மாநவுல கப்பனோ மனஸா

**அ.ப.** ஆமானவுல சந்தர்ஸனம்
அத்யந்தப்ரம் மானந்தமே!

**சரணம்.**

ஈலாகநி விவரிப்பலேநு
சாலா ஸ்வானுப வேத்யமே!
லீலா ஸ்ருஷ்டி ஜகத்ரயமேன
கோலா ஹலத்யாக ராஜ நுதுடகு (ராம)

விளையாட்டாக மூவுலகையும் படைத்துக் காப்பவன் ராமன். அவனுடைய பக்தியாகிய சாம்ராஜ்யம் யாருக்குக் கிடைக்கிறதோ, அவர்களுடைய தரிசனமே பிரம்மானந்தம் அதை விவரிக்க இயலாது. ஒவ்வொருவரும் அனுபவித்து அறியவேண்டிய இன்பம் அது!

மற்றொரு நிகழ்ச்சி சொல்வார்கள். ஒருமுறை தஞ்சை மன்னரைப் பாடுங்கள். நினைவு நிரம்ப நிதி தருவார்! சுகமாக வாழலாமே! உஞ்சுவிர்த்தி வேண்டாமே என்றார்களாம் சில அன்பர்கள்! உடனே சத்குரு பாடியதாகச் சொல்லப்படும் கீர்த்தனை இதோ.

**கல்யாணி** (பாடல் 439)

**பல்.** நிதி ஸால ஸுகமா! ராமுனி ஸந்
நிதி சேவ ஸுகமா -நிஜமுக பல்கு மனஸா

அ.ப.ததி நவ நீத க்ஷீரமுலு ருசோ தாஸரதி
த்யான பஜன ஸுதா ரஸமுருசோ

**சரணம்.**

தமஸம மநு கங்கா ஸ்நாநமு ஸுகமாகா
தம துர் விஷய கூப ஸ்நானமு ஸுகமா
மமத பந்தனயுத நரஸ்துதி ஸுகமா
ஸுமதி த்யாகராஜ நுதுநி கீர்த்தனமுஸுகமா.

## பொருள்.

நிதியால் வருமா சுகம்! ராமன் சன்னதி சேவையல்லவா சுகம்! தயிர், வெண்ணெய், பால் முதலியன சுவையா! தாசரதியைத் தியானித்து பஜனை செய்தல்லவா ருசி! அடக்கம், சாந்தம் ஆகிய கங்கா ஸ்நானம் சுகமா! சிற்றின்பச் சேறு நிறைந்த கிணற்று ஸ்நானம் சுகமா! கர்வம் நிறைந்த மனிதனைத் துதிப்பது சுகமா? த்யாகராஜன் வணங்கும் ராமனான தெய்வத்தைத் துதித்தல் சுகமா! மனமே! சொல்!

எல்லோர் மனமும் சொல்ல வேண்டிய பதிலை அவர் வினாவாகக் கேட்கிறார்! குரு பாராட்டும் சீடனாக சத்குரு விளங்கியிருக்கிறார். த்யாகராஜ ஸ்வாமியின் குருவாக ஸொண்டி வேங்கடரமணய்யா திகழ்ந்தார். பல வித்வான்கள் முன்னிலையில் த்யாகராஜரைப் பாடச் சொன்னார் குரு. 'தொரகுனா இடுவண்டிஸேவ' என்ற பிலஹரி ராகக்கீர்த்தனையை இனிமையாகப் பாடி 'காமிதபல தாயகியெள' என்ற இடத்தை விரிவாக நிரவல் செய்தாராம். பரவசப்பட்ட குருநாதர் தனது தோடா, மகரகண்டிகை இவற்றை த்யாகராஜரிடம் தந்து பாராட்டினாராம்! 'தொரகுனா இடுவண்டி சிஷ்யுடு (இப்படி ஒரு சிஷ்யன் கிடைப்பானா!)

பின்னர் வேங்கடரமணய்யாவின் மகளுக்குத் திருமணம் நடந்தபோது குரு அளித்த நகைகளை அவரிடமே திரும்பத் தந்து, தன் பெருந்தன்மையையும், பற்றற்ற நிலையையும் நிரூபித்தார் த்யாகராஜர் என்பர்! ஸத்குருவுக்கு ஒரே பெண் வாரிசு சீதா லக்ஷ்மம்மா அவரது திருமணத்தின் போது பலரும் பலப்பல பரிசுகளையும் தந்தார்கள் சத்குரு

'நிதி ஸாலஸுகமா? 'என்றவர், இல்லத்திலேயிருந்த துறவியாயிற்றே! எந்தப் பரிசுப் பொருளையும் ஏற்கவில்லை.

பல்லவி எல்லப்பையர் வரைந்து தந்த அற்புதமான ராமர் பட்டாபிஷேகம் படம் ஒன்றை மட்டும் எடுத்துக் கொண்டார். எடுத்துக்கொண்டதும் பரவசமானார். பரவசமானதும் பாடல் எழுந்தது ஸ்வாமி! ஸ்ரீராமனே! என்னைப் பாவிக்க நடந்து வந்தாயா! உன் திருமுகத்தைப் பார்ப்பது மட்டுமே என் வாழ்வின் பயன் என்றிருக்கும் என் எண்ணத்தை அறிந்து அன்போடு நடந்து வந்தாயா! இந்த்ர நீலமணி போன்ற தேகம், முத்துமாலையசையும் திருமார்பு, கரத்தில் கோதண்டம், அம்புகள், பக்கத்தில் சீதை இப்படியாக என்னைப் பாவிக்க நடந்து வந்தாயா!" என உருகினார்.

**மோகனம்** **ஆதி** (பாடல் 280)

**பல்.** நனு பாலிம்ப நடசி வச்சிதிவோ
நா ப்ராண நாத

**அ.ப.** வனஜ நயன, மோமுனு ஜூசுட ஜீ
வனமணி நெநருநா மனஸு மர்மமு தெலிசி

**சரணம்.**

ஸூரபதி நீலமணி நிப தநுவுதோ
உரமுந முத்யபு ஸருல சயமுதோ
கரமுந சரகோதண்ட காந்திதோ
தரணி தனயதோ த்யாகராஜர்ச் சித (நனு)

சரபோஜி மன்னரின் மாப்பிள்ளை மோதிராவும், சமஸ்தான மந்திரிகளும் திருவையாறு வந்து சத்குருவின் பஜனைகளைக் கேட்டு மகிழ்வார்கள் என்று வரலாறு கூறுகிறது. திருவாசகத்தைப் பாடும் போதும் கேட்கும் போதும் உள்ளம் உருகும், கண்ணீர் பெருகும். அப்படித்தான் சத்குருவின் பாடல்களைப் பாடும் போதும் கேட்கும் போதும் உள்ளம் உருகி, நெகிழ்கிறது. ஊனினை உருகி உள்ளொளி பெருக்கவல்லது இவரது தேனான தெலுங்குக் கீர்த்தனைகள் பக்தி செய்து பிழைக்கச் சொன்னான் கீதா சார்யன் அந்தப் பக்தியால் பாடுவது அன்றி வேறு உலகியல் பிழைப்பு அறியாதவர் த்யாக பிரம்மம்! எந்தப் பற்று மில்லாமல் எவன் ஒருவன் என்னையே உபாசிக்கின்றானோ அவனது அன்றாடத் தேவைகளைக் கூட நானே கவனிக்கின்றேன் என்றான் கண்ணபரமாத்மா அப்படியே எல்லாம் அவன் பொறுப்பு' என்று வாழ்ந்தவர் சத்குரு.

**ஜயந்தஸ்ரீ (மே.20) தேசாதி** (பாடல் 114)

**பல்.** மறுகேலரா ஓ ராகவா!

அ.ப.மறுகேல சரா சரரூப பராத்
பர சூர்ய சுதாகர லோசன-

**சரணம்.**

அந்நி நீவனுசு அந்தரங்கமுந
திந்ந கா வெதகி தெலிஸி கொண்டினய்ய
நிந்நெ காநி மதி நென்ன ஜால நொருல
நந்நு ப்ரோவ வய்ய த்யாகராஜ நுத

**பொருள்.**

ஓ ராமா! ஏன் இந்த மறைவு! நீ அண்ட சராசரம் நிறைந்தவன். ஸர்வேசுவரன். சூர்ய சந்திரர்களைக் கண்களாக உடையவன். எல்லாம் நீயே என்றதத்துவத்தை நான் கண்டு கொண்டேன். வேறு ஒரு தெய்வத்தை மனத்தால் நினைக்கவும் மாட்டேன். என்னைக் காப்பாயாக.

இந்த உலகில் மனிதர்கள் எதைத் தெரிந்து கொள்ள வேண்டுமோ அதைத் தெரிந்து கொள்வதில்லை பணம் சேர்க்க வழி தெரிகிறது! பகட்டாக வாழத் தெரிகிறது, பதவி அடையத் தெரிகிறது, மாடி, மனை, மக்கள், சுற்றம் என்று அனுபவிக்கத் தெரிகிறது, இதெல்லாம் தெரிந்து என்ன செய்ய? பற்றற்றான் பற்றினைப் பற்றிக் கொள்ளத் தெரியவில்லையே! அது தெரிந்தால் மற்றப் பற்றுக்கள், கட்டுக்கள் அவிழுமே! என்று காட்டும் பாடல் இதோ-

**தோடி** **சாபு** (பாடல் 22)

**பல்.** ஏமி சேஸிதேமி ஸ்ரீராம
ஸ்வாமி கருணலே நிவாரி லலோ

**அ.ப.** காம மோஹ தாஸுலை ஸ்ரீ ராமுனி
கட்டு தெலியலே நி வாரில லோ

**சரணம்.**

1. ஸவமு ஜேஸிதேமி கலம்கி புத்ரோத்
ஸவமு கல்கி தேமி
புவிலோ நந்ய பீஜ ஜநிதுநி கொநியேமி
சிவகர ஸ்ரீராமுநி தயலேநிவாரு. (ஏமி)

2. மேட கட்டிதேமி யந்துந லாந்தா
ஜோடு கட்டிதேமி
சேடி யலநு மெப்பிஞ்ச தெலிஸி தேமி
ஈடு லேநி ராமுநி தயலேநி வாரு (ஏமி)

4. ராஜ்ய மேலிதே நேமி பஹு ஜனுலலோ
பூஜ்யு லைதே நேமி
ஆஜ்றா ப்ரவாஹமுதோ அன்னமிடிதேநேமி
பூஜ்யுடைந ராமுனி தயலேனி வாரிலலோ (ஏமி)

**பொருள்:**

இராமனுடைய அருளுக்கும் பாத்திரமாகாதவர்கள் இவ்வுலகில் என்ன செய்து என்ன பயன்? யாகம் செய்து, செல்வ மிகுதியால் பிள்ளைகளின் பிறந்த நாள் விழாக் கொண்டாடி, பிறர் பிள்ளையை ஸ்வீகாரம் எடுத்துக் கொண்டும் என்ன பயன்!

காமம், மோஹம், இவற்றுக்கு அடிமையாகி இராமனின் நியமத்தை அறியாதவர்களுக்கு இவ்வுலகில் என்ன இருந்து என்ன பயன்!

மாடி வீடு கட்டி, நிறைய விளக்குகள் போட்டு மாதரை வசப்படுத்த அறிந்து இவற்றால் என்ன பயன் பெறப் போகிறார்கள்!

நாடுகளை ஆண்டு, பல மக்களால் போற்றப்பட்டு, நெய் வழியும் ஆகாரங்களை உண்டு, என்னபயன்!

ராமன் அருளில்லாதவருக்கு மற்ற எல்லாம் இருந்தாலும் அவர்கள் ஒன்றும் இல்லாதவர்களே! செல்வன் கழல் ஏத்தும் செல்வமே செல்வம்!

## என்ன கோபம்?

'இடரினும் தளரினும், எனதுறு நோய் தொடரினும் உனகழல் தொழுதெழுவேன் என்றார் ஞானசம்பந்தர்.' அம்மையப்பா! அடித்தது போதும், அணைத்திடவேண்டும். என்றார் வள்ளலார் அம்மா அடித்தால் பிள்ளை அவளை விட்டு அகலுமா! 'அரிசினத்தால் ஈன்ற தாய் அகற்றிடினும் மற்றவள் தன் அருள் நினைந்தே அழும் குழவி' யாக நாம் அவன் தாள்களையே 'சிக்' கெனப் பிடிக்க வேண்டும். அப்படிப் பிடித்த சத்குரு பாடுகிறார்.

**மார்கஹிந்தோளம்** **தேசாதி** (பாடல் 116)

**பல்.** சலமேலரா ஸாகேதராம

**அ.ப.**வலசி பக்தி மார்கமு தோறுநிந்நு
வர்ணிஞ்சு சுந்த நாபை

**சரணம்.**

எந்துபோர்து நேனு ஏமி சேயுதுனு
எச்சோடநி மொர பெட்டுதுநு
தந்த நலதோ ப்ரொத்து போவலேன
தாளக ஜாலரா த்யாகராஜ நுத

நான் எங்கே போவேன்! யாரிடம் முறையிடுவேன்! இனித்தாளேன். ஸாகேதராமா! உன்மீது அன்பு கொண்டு பக்தி மார்க்கத்தைப் பற்றியிருக்கும் என்மீது என்ன கோபம்! என்ற கருத்தில் அமைந்தது இப்பாடல்! சுவாமிகளின் மனக் கவலையை ராமனைத் தவிர வேறுயாரிடமும் சொல்லாத உறுதியும் புரிகிறது.

## நம்பிக்கை

மனிதனுக்கு இரண்டு கைகள் அவசியம் ஏன் எங்களுக்கு இரு கைகள் இருக்கின்றனவே என்று சொல்லாதீர்கள்! தன்னம்பிக்கை, கடவுள் நம்பிக்கை என இருகைகள் தேவை! உண்டு உண்டு என்று நம்பிக் கைகூப்புங்கள்! வாழ்வில் எல்லாம் உண்டு. நீர் உண்டு, அதைப் பொழியும் கார்உண்டு, விளையும் நிலம் உண்டு, நிலத்தின் பலன் உண்டு, நிதியுண்டு, கதியுண்டு, நெறியுண்டு, துதிகொண்ட நிலையுண்டு, தேர்உண்டு, கரியுண்டு, பரியுண்டு, எல்லாச் செல்வமும் உண்டு, உண்டுண்டு மகிழ உணவுண்டு! சாந்தமுறு உளம் உண்டு, வளம் உண்டு, அவனைப்பாடும் தியாகராஜர் குருவாக நமக்குண்டு!

**தோடி** **ஆதி** (பாடல் 10)

**பல்.** கத்தநு வாரிகி கத்து கத்தநி மொறல நிடு
பெத்தல மாடலு நேட பத்த மௌநோ

**அ.ப.**அத்தம்பு செக்கிள்ளதோ முத்துகாரு மோமுஜூட
புத்தி கல்கி நட்டி மாவத்த ராவதேமிரா

**சரணம்.**

நித்துர நிராகரிஞ்சி, முத்துகா தம்பூரபட்டி
சுத்தமைந மநஸுசே ஸுஸ்வரமு தோ
பத்து தப்பக பஜியிஞ்சே பக்தபாலனமு ஸேயு
தத்தயசாலிவி நீவே த்யாக ராஜ ஸந்நுத

'உண்டு தெய்வம்' என்று உரைப்பவர் நம்பிக்கையும், உண்டு' என்று சொல்லும் பெரியோர்களின் உரைகளும் பொய்யா? உன் முகம் காண ஆசையுடன் நித்திரை மறந்து, தம்புராவைக் கையில் ஏந்தி, நிர்மலமான மனத்துடன், ஸுஸ்வரமாக உன்னை பஜனை செய்து துதிக்கும் பக்தர்களைக் காப்பாற்றும் தயாசீலன் நீயல்லவா! என்று ஸ்ரீராமனை என்றும் நினைத்து, 'த்யானமே வரமைன கங்காஸ்நானம்' என்று வாழ்ந்தவர் தான் ஸ்ரீத்யாக பிரம்மம்.

ஒரு குழந்தைக்கு, ஒரு தாய் நயமாக நீ இந்தக் காரியம் செய்தால் உனக்கு மிட்டாய் கிடைக்கும். என்று சொல்வது போல், ஸ்ரீ ராமனைப் பற்றிக் கொள்ளுங்கள் கவலையில்லாத வாழ்வு, பேரின்பம், சத்சங்கம், எல்லாம் பெறலாம் என்று அன்பொழுகக் கூறுவார் மனமே! நான் சொல்வதை ஏன் கேட்க மாட்டேன் என்கிறாய் - என்று நயமாகக் கடிந்து கொள்வது போல நம்மை நமக்கு உணர்த்துவார். நீதி சொல்லும் ஆசானாக அறிவுரைகள் புகட்டுவார்.

1. நீதி சொல்வன - "சாந்தமுலேகா" - சாமா
மனஸுநிலுப - ஆபோகி

2. மனத்திற்கு அறிவுறுத்துவது போல -
மனஸா எடுலோர்- மலயமாருதம்
உண்டேதிராமுடு - ஹரிகாம்போதி - ஸ்ரீ

3. வந்தனம் செய்வதாக - எந்தரோம ஹானுபாவுலு
வந்தனமு
ரகுநந்தன - சகானா

4. முறையிடுவதாக - நீதயராதா - வஸந்தபைரவி
பலுகவதேமிரா
பூர்ணசந்திரிகா

5. பக்தியின் பெருமை சொல்வதாக
- ராமபக்தி - சுத்தபங்காள
அனுராகமுலே - ஸரஸ்வதி

6. நாம மஹிமை சொல்வதாக
- ஸ்மரணேசுகமு - ஜனரஞ்சனி
சுகி எவரோ - கானடா.

இப்படிப் பல வழிகளில் உலகை பக்திக் குடும்பமாக ஆக்கப் பாடியவர் நம் சத்குரு. பீதோவானையும் பீட்டில்ஸையும் அறிந்தவர்களும் நம் சத்குருவின் இசையை அறிந்து போற்றியிருக்கிறார்கள். இசைக் குடும்பமாக ராம பக்தி சாம்ராஜ்யம் உலகெலாம் பரவச் செய்த நாதபிரம்மமாம் த்யாக பிரம்மத்தின் புகழ் வாழ்க!

## 5. நான்கு வாயில்கள்

பகவத் கீதையில் இறைவனை அடையப் பலப்பல யோகங்களை உரைத்தார் கண்ணபரமாத்மா! "போர் முகத்தில் அர்ச்சுனற்குக் கீதை சொன்னான். நாம் புகழோங்க வாழ்ந்திருக்கும் பாதை சொன்னான். என்றார் கவியரசர். கர்மயோகம் கடமையைச் செய்தல் இதில் அவரவர் கடமைக்கு அவரவர் பலன் பெறலாம். பக்தி யோகம் - பக்தி செய்து வாழ்வதால் அவரவர் இன்பம் பெறலாம்! ஞான மார்க்கம் - இது தன்னையும் உயர்த்திக் கொண்டு பிறரையும் உயர்த்துவது அதிலும் சங்கீத ஞானம் உள்ளவர்கள், மொழி, இனம், மதம் கடந்து உலகையே உயர்த்த முடியும், இதற்கு நம் சத்குரு ஸ்ரீத்யாகராஜர் எடுத்துக் காட்டாகிறார்! 15 ஆம் நூற்றாண்டில் தாளபாக்கம் ஸ்ரீ அன்னமாச் சார்யார் அற்புதமான கீர்த்தனங்களால் கர்நாடக இசைக்கு வலுவூட்டி, பக்தியைப் பரப்பினார். 16 ஆம் நூற்றாண்டில் சங்கீத பிதாமகர் ஸ்ரீ புரந்தர தாசரால் அந்தக்கான மார்க்கம் புகழேணியில் ஏறியது.

17 ஆம் நூற்றாண்டில் க்ஷேத்ரக்ஞர்
ஸ்ரீ நாராயணதீர்த்தர்
ராமதாசர்
மார்கதர்ஸி சேஷய்யங்கார்
இவர்களும், பாடினர்

18 ஆம் நூற்றாண்டில் பக்தி பஜனை சம்பிரதாயம் பகவந் நாம போதேந்திராள் ஸ்வாமி. ஸ்ரீதர ஐயாவாள் இவர்களால் வளர்க்கப் பெற்றது. சங்கீதமும் மும் மூர்த்திகளும், திரிவேணியாக இசைக் கடலைப்பொங்க வைத்தனர்! மெய்யுணர்வைப் பெற எளிய வழி ஞானம்

ஞானத்தை அடைய பக்தியே வழி அந்தப் பக்திக்கும் கானமே உறுதுணை பக்தியுடைய சங்கீத ஞானம் ஆன்மாவை ஈடேற்ற வல்லது அந்தக்கான மூர்த்தியாகவே சத்குரு விளங்கினார்.

ஒலிபெருக்கி வைத்து, இசைவிழாக்கள், மாநாடுகள் நடத்தி இசையை வளர்ப்பவரும் உள்ளனர். வீட்டில் விளக்கின் முன் அமர்ந்து நாதோ பாசனை செய்பவரும் இருக்கின்றார்கள். முன்னவர்கள் ஹரித்து வாரத்தில் பொங்கிவரும் கங்கை என்றால், பின்னால் சொல்லப் பட்டவர்கள் நம் வீட்டுப் பூஜை அறையிலுள்ள கங்கைச் செம்பில் உள்ள கங்காதீர்த்தம் ஒப்பார். எங்கிருந்தாலும் கங்கைநீர், கங்கைமாதா தானே! எந்த இடத்தில் யார் பாடினாலும் அவர்கள் அனைவரும் இசைத் தொண்டர்களே! சத்குருவுக்கு வாரிசு நேரடியாக யாரும் இல்லை. அவரது சீடர்களும் அவர்களின் இசையைக் கேட்டு ரசிப்பவர்களும், பாடுபவர்களும், பரப்புகின்றவர்களும், சத்குருவின் **வாரிசுகளே!**

## நற்குணங்கள்

ஞானமுள்ளவர் பின்வரும் குணங்களையுடையவர்கள்! அடக்கம், பகட்டின்மை, அஹிம்சை, பொறுமை, நேர்மை, குருபக்தி, புலனடக்கம், கொள்கையில் உறுதி, சொல்லில் செயலில் தூய்மை, ஆணவமின்மை, பிறப்பு மரணம் இவற்றின் காரணங்களையறிந்து முக்குற்றங்களினின்று நீங்குதல். த்யாகராஜ ஸ்வாமி குணவாக, ஞானியாகத் திகழ்ந்தார் இறைவன் என்ற அருள் நிலையத்தை அடைய நான்கு வாயில்களை நான்கு மார்க்கங்களைச் சொல்லிச் சென்றனர் நம் முன்னோர்.

1. சத்புத்ர மார்கம் - இறைவனை மகனாகப் போற்றுதல் (தன்னை அவனது மகனாகப் பாவித்தலும்)
2. சஹ மார்கம் - தோழமை கொண்டு நடத்தல்
3. தாச மார்கம் - அவன் எஜமான் நான் தொண்டன் எனல்
4. சன் மார்கம் - நாயக நாயகி பாவம் அவன் புருஷோத்தமன் ஜீவாத்மா நாயகி, காதலி.

## 1. குழந்தை ராமன்

பகவானை "அம்மையே அப்பா"! என அழைத்த மணிவாசகர்,
"அப்பன்நீ, அம்மைநீ" என்ற அப்பர்
"தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம்" என்ற வள்ளலார்
போல" சீதம்மா மாயம்மா.

ஸ்ரீ ராமுடு மாதண்ட்ரி" என்று சீதையை அன்னையாக, ராமனைத் தந்தையாகப் பாடியுள்ளார் சத்குரு உண்மையில் அவரது அப்பா ராம பிரம்மம், தாய்சீதம்மா ஆனால், ராமனுக்குத் தாயாகி வளர்க்க ஆவல் கொண்டார் இந்தக் கருணைத்தாய்! குழந்தைக்கு நாவை அசைத்து (தால் - நாக்கு ஆட்டு - அசைத்தல் - தாலாட்டு) ஆராரோ, தாலேலோ என்று பாடி உறங்க வைப்பது எந்தத்தாயும் செய்வாள் த்யாகு அம்மா பாடுகிறார்.

**ரீதி கௌளை ஆதி** (பாடல் 594)

பல். ஜோஜோ ராம ஆனந்தகன (ஜோ)

**சரணம்.**

1. ஜோஜோ தசரத பாலராமா
   ஜோஜோ பூஜா லோலராமா

2. ஜோஜோ ரகுகுல திலக ராமா
   ஜோஜோ குடில தராலக ராமா

6. ஜோஜோ த்யாக ராஜார்ச்சித ராமா
   ஜோஜோ பக்த ஸமாக ராமா

ஆனந்த மயமானவனே! தசரதன்மகனே! நிலமகள் பெற்ற மகள் சீதை மணாளனே! ரகுகுல திலகனே! சுருள் சுருளான முடி, கொண்டவனே! த்யாகராஜனால் வணங்கப் பெறுபவனே! பக்தர்களால் சூழப் பெற்றவனே! தாலேலோ!

உலகையெல்லாம் விழித்திருக்கச் செய்ய வேண்டியவன் ஏன் உறங்க வேண்டும்! கண்ணனவன் தூங்கிவிட்டால் காசினியே தூங்கிவிடும் அல்லவா! "அவனுக்குக் களைப்பு அதிகம்! தூங்கட்டும்" என்கிறார் சத்குரு.

**ரீதி கௌளையில் ஆதி** (பாடல் 584)

படலிக தீர பவ்வளிஞ்சவே! என்று பாடுகிறார். மாசில்லாத மிதிலேசன் பெண்ணுடன் கானகத்தில் நடந்தாய், குகன் ஓடத்திலே கங்கைத்துறை அடைந்தாய் சித்ர கூடம் மிசை கடந்து சென்றாய்' மாரீசனான மாயமானின் பின் ஓடிக்களைத்தாய்! பின், தேவியைத் தேடி இளைத்தாய்! இலங்கையை அழித்தாய்! இராவணாதியரை மடித்தாய்! எத்தனை பெரிய அற்புத அவதாரச் செயல்கள் செய்தாய்! களைப்புத்தீர உறங்கு என்று தாயாகித் தாலாட்டுப் பாடுகிறார் தயைக்கடல்!

## திருப்பள்ளி எழுச்சி

மார்கழி வந்து விட்டால், திருப்பள்ளி எழுச்சி மிகச் சிறப்பாக எல்லா ஆலயங்களிலும் நிகழும் பிரம்ம முகூர்த்தம் போன்றது மார்கழி. உறங்கும் ஜீவாத்மாக்களைத் தட்டி எழுப்ப வேண்டுமே. அதற்குத் தான் திருப்பள்ளி எழுச்சி பரமாத்மாவுக்கன்று! தியாக அம்மா ராமனை எழுப்புகிறார்.

**பௌளி** ஜம்ப (பாடல்595)

**பல்.** மேலுகோவய்ய மம் மேலுகோ ராம
மேலைன ஸீதா ஸமேதா நா பாக்யமா

**சரணம்.**

நாரதாநுலு நின்னுகோரி நீமஹிமலவ்
வாரிகா பாடுசுந் நாரிபுடு தெல்ல
வாரகா வச்சிநதி ஶ்ரீராம நவநீத
க்ஷீரமுலு பாகுகா நாரகிம்பனுவேக (மேலுகோ)

என்பாக்யமே! ஸ்ரீராமா! சீதையுடன் கூடியவனே! எழுந்தருள் எங்களை ஏற்றுக்கொள். நாரதர் முதலியோர் உன்னை வேண்டி உன் பெருமைகளைப் பாடி நிரந்தரமாய்த் துதிக்கின்றார்கள் வெண்ணெய், பால், இவற்றை அமுது செய்ய எழுந்தருள். என அழகாக எழுப்புகிறார். 'மேலுகோ தயாநிதி' என் சௌராஷ்ட்ர ராகப் பாடலிலும் பள்ளி எழுந்தருள வேண்டுகிறார். எழுந்ததும் குழந்தை ராமனுக்குப் பசிக்குமே! பால் தரவேண்டாமா? பால் சத்குருவின் உடல் அதில் தயிரான உள்ளம், வெண்ணை திரண்ட அன்பு நெய்யான பக்தி. எல்லாமே ராமனுக்காகத் தானே!

**தோடி** ரூபகம் (பாடல் 20)

பல். ஆரகிம்பவே - பாலாரகிம்பவே ரகு
வீரஜனக ஜாகர பவித்ரித மௌ வென்னபா (பால்)

**சரணம்.**

ஸாரனமன திவ்யான்னமு
ஷட்ரஸயுத பக்ஷணமுலு
தார ஸோதாரதுலதோ த்யாகராஜ விநுத (பால்)

என்று அன்பாகப் பரிவாக அழைக்கும் அழகே அழகு!

இறைவனுக்குப் பல்லாண்டு பாடியவர்கள் பொங்கும் பரிவில் பாடினார்கள். பல்லாண்டு என்னும் பதம் கடந்தானுக்குப் பல்லாண்டு பாடுவது மரபுதான்! பெரியாழ்வார் பாடவில்லையா? எச்சரிக்கையாக எழுந்தருள் ராமா! எனப்பாடும் உத்ஸவ ஸம்ப்ரதாயக் கீர்த்தனை இதோ.

**யதுகுலகாம் போதி  ஜம்ப  (பாடல் 574)**

**பல்.** ஹெச்சரிக கா ராரா! ஹே ராமச் சந்த்ரா!
ஹெச்சரிக கா ராரா! ஹே சுகுண ஸாந்த்ர!

**அ.ப.** பச்சவில் துனி கன்ன பாலித சுரேந்த்ரா!

**சரணம்.**

நிநு ஜூட வச்சி பஹினி கரம்புசிலுக
மநஸு ரஞ்ஜில்லனு மஹிமலனு பலுக
மினுவாஸ வெல்ல விருகன சால ஜிலுக
கநத்யாக ராஜனுத கனமுத்து ருலுக

**பொருள்.**

இராமனே! நற்குணங்கள் நிறைந்தவனே! எச்சரிக்கையாக, ஜாக்கிரதையாக எழுந்துவா! உன் தங்கை பார்வதி உன்னைக் காண வருகிறாள். அவள் கையிலுள்ள கிளி உளம் பூரித்து உன் புகழைப் பாடுகிறது. வானோர் பூமாரி பொழிகிறார்கள்! த்யாகராஜன் பெருமை கொண்டு, உன்னைக் கண்டு மகிழ, எச்சரிக்கையாகவா! இத்துடன் நிற்பாளா தாய்! பிள்ளைக்குக் கண்ணேறு (திருட்டி) படுமே என்று ரனக்ஷயிடுவாள்! கறுப்புப் பொட்டு வைத்தால் கண் படாதாம். சக்கரவர்த்தித் திருமகனுக்குக் கோசலைத் தாயாகமாறி.
'ரக்ஷ பெட்டர - தொரகு
ரக்ஷ பெட்டர '- என்று பைரவிராகப் பாடல் பாடுகிறார். அவன் மேருஸமான தீரவரதன் அவன் நடந்தால் நடையழகு! சிரித்தால் மோகனச் சிரிப்பழகு! அவன் கல்யாணமோ வைபோகம். இன்று எந்த வீட்டில்

கல்யாணம் நடந்தாலும் 'ஸீதா கல்யாண வைபோகமே!' என்ற ஸ்வாமிகளின் பாடல் ஒலிக்கிறது. குரலிலோ நாதஸ்வரக் குழலிலோ! அனுமனால் துதிக்கப் பெறுபவன், புண்ய சரிதம் உடையவன், சூர்ய சந்திரர்களைக் கண்களாக உடையவன். அழகன் பக்தர்களைப் பாலிப்பவன். அம்பு அறாத்துணியை உடையவன் போகம், மோட்சம் ஆகியவற்றை விளையாட்டாகவே தரவல்லவன். பூசுரனரக் காப்பவன். அப்படிப்பட்ட என் ராமன் சீதை கல்யாணம் வைபோகமே!

**சங்கராபூரணம்** **கண்டலகு** (பாடல் 575)

**பல்.** ஸீதா கல்யாண வைபோகமே!
ராமா கல்யாண வைபோகமே!

**சரணம்.**

1. பவனஜ ஸ்துதி பாத்ர பாவன சரித்ர
ரவிஸோம வரநேத்ர ரமணீய காத்ர

2. பக்தஜன பரிபால பரிதசர ஜால
புக்தி முக்திதலீல பூதேவ பால

கல்யாணத்தில் நலுங்கு உண்டே! அதுவும் தெலுங்கு சம்பிரதாயத்தில் **நலுகு** பாடல் பிரஸித்தமாயிற்றே.

**மத்யமாவதியில்** (பாடல் 576)

"நகுமோமு கலவாநி நாமனோஹருநி
ஜகமேலு சூருநீ ஜாநகி வரு
தேவாதி தேவுநி திவ்ய சுந்தருநி
ஸ்ரீ வாசுதேவுநீ ஸீதா ராகவு நி

என்று ஸ்வாமி நலுகு பாடுகிறார். பெண் மாப்பிள்ளைக்கு ஆரத்தி எடுத்த பிறகு தானே மணையை விட்டு எழுந்திருக்க முடியும். சோபானே பாடி, வாழ்த்தி, ஆரத்தி எடுக்க வாருங்கள்!

**ஸுரடி (சுருட்டி)** (பாடல் 580)

**பல்.** பதிகி ஹாரதீரே - ஸீதா

**அ.ப.**அதிம்ருது தர ஸத்ய பாஷுணிகி
அகிலாண்ட நாதநுநிகி - (ஸீதா)

'சோபானே' பல்லாண்டு வாழ்க! சந்திரனை வெல்லும் முகத்தையுடையவனே! உனக்குப் பல்லாண்டு! பெண் மாப்பிள்ளையை உஞ்சலில் அமர்த்தி 'உய்யாலலூகவய்யா!' என்ற ஊஞ்சல் பாட்டும் பாடியாயிற்று. வெற்றிலை மடித்துத் தரவேண்டாமா? 'விடமு சேயவே' என்று அதனையும் பாட்டில் தந்து விடுகிறார் தாயிற் சிறந்த தயையுடைய ஸ்வாமிகள்.

## 2. தோழமைநெறி

சுந்தரமூர்த்தி சுவாமிகள் இறைவனிடம் பொன், மெய்ப்பொருள், போகம், திரு எல்லாம் பெற்றார். தம்பிரான் தோழரான சுந்தரர் இறைவனிடம் அசதியாடிப் பேசுவார்! 'இவரலாது இல்லையோ பிரானார்' (இவரை விட்டால் எனக்குத் தலைவன், வேறு கடவுளர் இல்லையோ?) என்று பேசுவார். 'மற்றைக்கண் தான் தாராது ஒழிந்தால் வாழ்ந்து போதிரே! என்பார். கெஞ்சி, கொஞ்சி விளையாடி, ஏகிப் பேசி மகிழ்வது தோழமைக்கு அழகுதான். த்யாக பிரம்மமும் 'இங்கு நீ இல்லையா அப்பா! நல்லது! யார்பேச்சைக் கேட்டாயோ! போ! எத்தனையோ நூல்களை ஆராய்ந்தும் உன்போக்கு எனக்கு ஆச்சரியமாயிருக்கிறது! நீ பக்தபராதீனன் என்று சொல்லியிருந்தாய்! நீ சத்யசந்தன் என்று நம்பினேன்! என்ன விந்தையோ! யார் பேச்சைக் கேட்டு இப்படி இருக்கிறாயோ?" என்று கிண்டல் செய்கிறார். அவன் பக்தருக்கு அடிமை தான் சத்ய சந்தன் தான் ஸத்குரு அறிவார்! நாமும் அறிவோம்!

**காம்போதி (மே.28)** **ஆதி** (பாடல் 243)

**பல்.** எவரிமாட விந்நாவோ! ராவோ
இந்துலே வோ பளி பளி

**அ.ப.**அவநிலோ நார்ஷேய பௌருஷேயமந்தி
சோத்ய மெலுக லே நய்ய

**சரணம்.**
பக்த பராதீ நுடநுசு பரமபாகவதுல
வ்யக்த ரூபுடை பலிகினா முச்சட
யுக்த மனுசு நுண்டி

சக்தி கல மஹாதேவுடு நீவநி சந்தோஷமு நறுண்டி
ஸத்த சித்துடகு த்யாகராஜ நுத
ஸத்ய ஸந்துடநு கொண்டிநிலலோ-

ஸ்வாமி இராமாயணத்தில் தோய்ந்தவர். அவரை தந்தையார் இராமாயணப்ரசங்கம் செய்துவந்தவர். சத்குரு, இராமாயண நிகழ்ச்சிகளைத் தன் கீர்த்தனைகளில் அழகாக நவரத்னங்களைப் பதிப்பது போல் பதித்திருக்கிறார். கிஷ்கிந்தா காண்டத்தில், ஆஞ்சனேயர் இராம லெட்சுமணரை வணங்கினார். அப்போது தானே தன் பெருமைகளைக் கூறாமல், நடந்தவற்றையும் அங்கு வந்த காரணத்தையும் கூறுமாறு தம்பி 'லெட்சுமணருக்கு ஜாடையால் கூறினார். ஆகவே இந்தத் த்யாகராஜனுடன் நீ பேசமாட்டாயா? பிகுவா?'' என்று கேட்கும் சத்குரு, கிஷ்கிந்தா காண்ட நிகழ்ச்சியை இணைக்கிறார்.

**சாருகேசி** **தேசாதி** (பாடல் 224)

**பல்.** ஆடமோடி கலதே! ராமய்யா மாட (லாட)

**அ.ப.** தோடு நீட நீவே யனுசு பக்திதோ
கூடி பாதமு பட்டின நாதோ - மாட (லாட)

**சரணம்.**
சதுவுலந்நி தெலிஸி சங்கராம் ஸுடை
ஸதயுடா சுக ஸம்பவுண்டும் ரொக்க
கதலு கம்முநி பல்க ஜேஸிதிவி
காகநு த்யாக ராஜு ஆடின மாட (லாட)

இப்படிப் பிகு செய்கிறாயே! என்ன நியாயம்! என்று பரிகசித்தவர் தாசனாகித் தொழுகிறார்.

## 3. உன் அடிமை நான்

உனக்கு என்மீது தயையில்லையா? கல்யாணராம? உன்னை யார் தடுப்பார்? என்னைக் காப்பவன் நீ தானே என்று உன்னைச் சரணடைந்த எனைக் காக்கத் தாமதமா! என் மனம் தத்தளிக்கலாமா! விரைவில் (உன்தயை வராதா!)

**வஸந்தபைரவி (மே.14) ரூபகம்** (பாடல் 58)

**பல்.** நீ தய ராதா

அ.ப.காதெநே வாரெவரு கல்யாண ராமா!

**சரணம்.**

ராமராம ராம த்யாகராஜ ஹ்ருத் ஸதன
நாமதி தல்லடில்லக நீயாயமா? வேகமே

என்னைக் காப்பாற்று! ராமா! என்று பல கீர்க்கனைகளில் கெஞ்சுகிறார்.

'ஸுதா மாதுர்ய பாஷண
ஸுதா கரா நந' (பாடல் 82)

"எந்நடோ ரக்ஷிஞ்சிதேநீ விபு
டீ வகநு நுண்டவ லெநா (பாடல் 92)

'ரா‌ரா நன்னேலு கோரா (பாடல் 95)

'நீ வண்டி தைவமு நேகாந
நீரஜாக்ஷ ஸ்ரீ ராமய்யா' (பாடல் 106)

தவ தாஸோஹம் (பாடல் 492)

பாடல்களில் தான் இராமனையே சரணடைந்த தாசன், தொண்டன், பக்தன் என்றும் தன்னைக் காப்பது அவன் பொறுப்பு என்றும் பாடுகிறார்.

## 4. அனுமன் போல

'பண்டுரீதி கொலுவு' என்ற ஹம்ஸ நதராகப் பாடலின் சரணத்தில் த்யாகராஜ ஸ்வாமி வேண்டுவதைப் பார்த்தால், அனுமன் போலத் தான் ராமதாசனாக இருக்க ஆசைப்பட்டார் என்பது புரிகிறது.

"ரோமாஞ்சமனே கன கஞ்சுகமு
ராமபக் துடென முத்ர பிள்ளயு
ராம நாம மணி வார கட்கமிவி
ராஜில்லுவய்ய த்யாகராஜு நீகே'

உன்னைத் துதிக்கும் போது ஏற்படுகிற மெய்சிரிப்பு (உடல் புளகித்து மயிர் கூச் செறிதல்) சட்டையாக ராம பக்தன் என்ற முத்திரை பெற்று, ராம நாமமே வாளாக, உனக்குச் சேவகனாக இருக்க ஆவல். இதெல்லாம் அனுமன் பெற்றிருந்த பக்தி நிலையன்றோ.

ஒரு எஜமானனின் அடிமை நல்லமுறையில் வாழ முடியவில்லை என்றால் எல்லோரும் அந்த முதலாளியை ஏன் அவர், இல்லையா? இவ்வளவு பெரிய பணக்காரன், தன் வேலையாளுக்கு இரக்கம் காட்டி உதவ வில்லையே என்று சொல்வார்கள். அப்படி, ராமா உன் அடிமை நான் என்றிருந்தும் என்மீது கருணை புரியாமல் ஏன் தாமதம் செய்கிறாய்! என்கிறார்.

**சரஸ்வதி மனோஹரி (மே.28) தேசாதி** (பாடல் 299)

**பல்.** எந்தவேடு கொந்து ராகவா
பந்தமேலரா - ஓ ராகவா

**அ.ப.**சிந்த தீர்ச்சுடகெந்த மோடிரா
அந்தராத்மனா செந்தராகனே!

**சரணம்.**

சித்தமந்து நின்னு ஜூசு சௌக்யமே
உத்தமம் பநுசு உப்பொங்குசுநு
ஸத்த மாத்ரமா சாலநம்மிதிநி
ஸார்வ பௌம ஸ்ரீ த்யாகராஜ நுத

**பொருள்:**

நான் எத்தனை வேண்டியும், ராகவா! உனக்கேன் பிடிவாதம்! என் கவலையைத் தீர்க்க பிகுவா? என் சித்தத்தில் உன்னைத் தரிசிக்கும் சுகமே மேலான தென்று மகிழ்ந்திருக்கிறேனே! உன்னை முற்றிலுமாக நம்பியிருக்கிறேன். ஸார்வ பௌமமேன! உலகாள்பவனே!

'முடியாது' என்று சொல்லி விடாமல் என்னைக் காப்பாற்று. 'காரொளி வண்ணனே! கதறுகிறேன். இத் த்யாகராஜன் ப்ரஹலாதனுக்காகத் தூணிலிருந்து வந்தாய். சுக்ரீவனைக்காக்க மரத்தின் பின் வந்தாய் யசோதைக்காகக் குழந்தையாய் வந்தாய்! எனக்கு மட்டும் அருள முடியா தென்று சொல்லி விடாதே!

எனச் சங்கராபரணத்தில் (பாடல் 318)
வல்லகாத நக ஸீதா
வல்லபா ப்ரோவு நா (வல்ல)

என்று உருகி, அவன் அருளைப் பருகி நம்மையும் உருக வைக்கிறார்.

## 5. ஸன்மார்கம்

காதலன் காதலி உறவு மிகச் சிறந்தது. பலத்யாகங்களைச் செய்ய வல்லது இந்த உறவு. அவன் கண்கள் இவன் கண்கள் கலந்த நாள் முதலாக ஊண் மறந்து உறக்கம் மறந்து, உற்றாரை மறந்து, ஏன், தன்பேரையும் மறந்து, எல்லாம் அவனே, என்ற நிலை வரும்! இந்தச் சிற்றின்பக்காதலே இப்படி எனில் பேரின்பக் காதல் எத்தனை பாடுபடுத்தும். ஜீவாத்மா இறைவனிடம் சேர, எல்லாம் அறத்தன்னை இழந்து நிற்கவேண்டும். 'நீயும் நானுமாய் ஏக போகமாய் இருக்கும் வகை' பரமசுகம்! அதனைத்தான் பெற உயிர் ஏங்கும் ஏக்கமே பேரின்ப, பக்திக் காதல்.

'முன்னம்' அவனுடை நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடை ஆரூர் கேட்டாள்,
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி யானாள்.

என்ற அப்பர் சுவாமியின் அருள் வாக்கை நினைத்து உணர்ந்தால் நாயக - நாயகி பாவத்தின் சீர்மை புரியும்.

திருமங்கை மன்னர் தன்னைக் காதலியாக மாற்றிக் கொண்டு **பரகால** நாயகி பாவத்தில் பாடினார். நம் மாழ்வாரோ **பராங்குச** நாயகியானார். ஆண்டாளோ நாயகி, நாச்சியார் தாம்! 'பக்தியில் தன்பேச்சு', பிரேமத்தில் பெண் பேச்சு என்பார்கள் அந்தப் பிரேமையில் முதலில் நாமம் பாடும் சுகம் மலர்கிறது.

**யதுகுலகாம்போதி** (பாடல் 537)

**பல்.** "ஸ்ரீராம ஜயராம ச்ருங்கார ராமயனி
சிந்திம்பராதே மனஸா

**சரணம்.**

1. தலுகு ஜெக்குல முத்து பெட்டு கௌஸல்யமுநு
தபமேமி ஜேஸெனோ தெலிய.

2. தசரதுடு ஸ்ரீராமா ரா ராயனி பிலுவமுநு
தபமேமி ஜேஸெனோ தெலிய.

3. தநிவார பரிசர்ய ஸேய ஸௌமித்ரிமுநு
தபமேமி ஜேஸெனோ தெலிய.

4. தனவெண்ட ஜந ஜூஸி உப்பொங்க கௌசிகுடு
தபமேமி ஜேஸெனோ தெலிய

இப்படிப் பல சரணங்கள் பாடுகிறார். உன் கன்னத்தில் முத்தமிட கௌஸல்யா என்ன தவம் செய்தாளோ? 'ஸ்ரீராமா வாப்பா' என்று உரிமையுடன் அழைக்கத் தசரதன் என்ன தவம் செய்தானோ? உனக்குத் தொண்டு செய்ய இலக்குவன் செய்த புண்ணியம் என்னவோ? இருபுறமும் ராம லெட்சுமணர்வரப் பூரித்து நடந்தானே அந்த விசுவாமித்ரன் செய்த புண்ணியம் என்னவோ? இப்படி 'ராமா ராமா, ஜெயராமா' என்று ராமம் சொல்லியே அவனைத் தரிசிக்கும் பாக்யம் பெற்றார் சத்குரு.

அடுத்தது, ராமன் என்ற சொல்லின் பொருள், ரமிக்கச் செய்பவன் என்பது மனத்துக்கு இனியான்' என்பார் ஆண்டாள்! அவன் அழகு கோடி மன்மதர்களை வெல்லும் அழகு அந்த திவ்யரூப அழகனைக் காண ஏங்குகிறார் தியாக நாயகி.

**கந்நட கௌள ரூபகம்** (பாடல் 147)

**பல்.** ஸொகஸு ஜூட தரமா நீ

**அ.ப.** நிகநிக மநுசு கபோல்
யுகமு சே மெறயு மோமு

**சரணம்.**

1. அமரார்ச்சித பதயுகமோ
அபய ப்ரத கர யுகமோ
கமனீய தநு நிந்தித
காம காம ரிபு நுத நீ

2. வர பிம்ப ஸமா தரமோ
வகுளஸு மம்புல யுரமோ
கரத்ருத சர கோதண்ட
மரகதாங்க வரமைந

3. நிநு நவ்வோ முங்குருலோ
மறிகந் நுலதே டோ
வரத்யாக ராஜர்ச் சித
வந்த நீய இடுவண்டி (ஸொகஸு)

என் ராமா! பளபளவென்று ஒளி வீசும் உன் இரு கன்னங்களுடன் கூடிய உன்முக அழகைக் காண்பது சாத்தியமா! தேவர் தொழும் உன் திருவடிகளை, அபயம் அளிக்கும் உன் கரங்களை, மன்மதனைப் பழிக்கும் உன் வடிவழகை நான் காண்பது சாத்தியமா? கோவைக்கனி போன்ற ஆபரங்களை மகிழமலர்மாலை பணிந்த மார்பை, கோதண்டம் ஏந்திய காத்தை, அம்புகளை உடைய மரகத வண்ணனே! உன்னழகை நான் காண்பது சாத்தியமா!

உன் புன்சிரிப்பை, முன்னுச்சி முடியை, கண்ணழகை திவ்ய சௌந்தர்யத்தை த்யாகராஜன் காண்பது சாத்தியமா?

மூர்த்தி அவனுடைய வண்ணமும், வடிவழகும் பாடாய்ப் படுத்துகிறது. மைவண்ண நறங்குஞ்சி மகரக் குழைக்காது. கைவண்ணம், கால்வண்ணம் மரகதமணி வண்ணம் எல்லாம் இவ்வண்ணம் தலைவியைத் தவிக்க வைக்கின்றன. அவனுடைய மலர்ச்சிரிப்பு சிரித்தமுகம் செங்கண் பங்கயம் காணத்தவிக்கும் மற்றொரு பிரபலமான கீர்த்தனை இதோ.

(பாடல் 142)

ஆபேரி (மே. 22) ஆதி

பல். நகுமோமு கநலேனி நாஜாலி தெலிஸி
நநுப்ரோவரா ராதா ஸ்ரீ ரகுவர நீ-

அ.ப.நகராஜதர நீது பரிவாரு வெல்ல
ஒகி போதன ஜேஸே வாரலு காரே
யடுலுண்டுதுரா நீ-

**சரணம்.**

ககராஜு நீயாநதி விநிவேக சநலேடோ
ககநா நிகிலகு ப்ஹு தூரம் பநி நாடோ
ஜகமேல பரமாத்மா எவரிதோ மொஈ விடுது
வகஜுபடு தாளநு நந்நேலுகோரா த்யாகராஜ நுதுநீ-

உன் சிரித்த முகம் காணாமல் துயருறும் என்னைக் காக்க வரக் கூடாதா? ஸ்ரீ ரகுவர! கோவர்த்தன கிரியைத் தாங்கியவனே! உனது பரிவாரங்கள் உனக்குச் சரியாக எடுத்துச் சொல்ல வில்லையா? அப்படியிருக்க முடியாதே! ஒருவேளை கருடாழ்வார் வேகமாகப் பறந்து வரவில்லையா? விண்ணிற்கும் மண்ணிற்கும் தூரம் அதிகம் என்று சொல்லி விட்டானா? பரமாத்மாவே! நான்

யாரிடம் முறையிடுவேன்! என்னுடன் விரோதம் பாராட்டாதே! நான் தாளமாட்டேன். என்னை ஆளவா என்று இந்த நாயகி அழைக்கும் குரல் பட்சி ராஜனுக்கே புரியுமே! ஆண்டாள் நாச்சியாருக்காக அரங்கனை ஸ்ரீவில்லிபுத் தூருக்கே மண நேரத்திற்குள் அழைத்து வந்து சம இடம் பெற்றவனாயிற்றே மற்றதிவ்ய தேசங்களில் பெருமாள் திருமுன்பு பட்சிராஜன் நின்று சேவை சாதிப்பார்! வில்லிபுத்தூரிலோ ரங்க மன்னாருக்கு வலப்புறம் கோதை நாச்சியார் இடது புறம் கருடாழ்வார் என்று சமஸ்தானம் உண்டே!

ஒரு பாடலில்
நந்து ப்ரோவ நீகிந்த தாமஸமா!

(என்னைக் காக்க இத்தனை தாமதமா உனக்கு! என்று கேட்கிறார்)

நீகே தெலியக போதே
நேநு ஏமி ஸேயுதுரா?

(என் துயரத்தை நீயே அறியவில்லை என்றால் நான் என்ன செய்வேன்?) என்று மற்றொரு பாடலில் கேட்கிறார்!

என்னை அசட்டை செய்து, கவனிக்காமல் விடுவதில் உனக்கு என்ன பலன்?

பராகு ஜேஸிந நீ கேமி
பலமு கலிகெரா பராத்பரா?
என்றும் கேட்டுப் பார்க்கிறார்.

அன்பு, பிரேமை, காதல், பக்தி எல்லாச் சொல்லுக்கும் ஜீவன் உண்டு. காக்கைச் சிறகில் பரந்தாமனில் கருமை நிறத்தையும், மரங்களில் அவர் பச்சை வண்ணத்தையும், கேட்கும் ஒலிகளில் அவன் கீதத்தையும் இணைத்துப் பார்ப்பதே பக்தி 'பார்க்கின்ற பொருளோடு நீயே இருத்தி' பசுங்கன்றைப் பார்த்தால் கூட 'இது அவன் கண்ணனாகி மேய்த்த கன்றல்லவா என்று தழுவ வைக்கும்! நாகத்தைக் கூட அவன்படுக்கையல்லவா என்று தொடச் செய்யும் அவனே எல்லாம்! இப்படிநம் தியாக நாயகியும் அனுபவிக்கிறார்.

**பிலஹரி** **ஆதி** (பாடல் 376)

**பல்.** நா ஜீவாநார நா நோமு பலமா

அ.ப.ராஜீவ லோசன ராஜராஜ சிரோமணி

**சரணம்.**

நா சூபு ப்ரகாசமா
நா நாஸிகா பரிமளமா
நா ஜபவர்ண ரூபமா
நாது பூஜா ஸுமமா த்யாகராஜ நுத

என் உயிருக்கு ஆதாரமே! நான் நோற்ற நோன்புகளின் பலனே! ராஜாதி ராஜருள் தலையாவைனே என் பார்வையின் ஒளி நீயே! என் நாசி நுகரும் நறுமணம் நீயே! நான் ஜபம் செய்யும் அட்சரங்களின் உருவம் நீயே! நான் செய்யும் பூஜையில் மலரும் நீயே! என்று பாடுகிறார். பூவினுள் வாசம், நீரின் தன்மை, குழலின் இசை, வேதத்தின் சாரம் எல்லாம் அவன்! ஆழிநீ, அனலும்நீ,

ஊழிநீ, ஒருவன்நீ, எல்லாம் நீயே! உடல் எந்தப் பணியில் ஈடுபட்டிருந்தாலும் உள்ளம் அவனையே எண்ணும். எதைக் கண்டாலும் அதில் அவனையே காணும் கண், வாய்., அவனை அன்றி வாழ்த்தாது. கை உலகம் அளந்தவனையன்றி யாரையும் தொழாது. அவனுடைய திவ்ய ரூபத்தைத் தவிர எதையும் காணா கண்கள்! அவன் புகழன்றி வேறு சொற்களைக் கேளா செவி! என்று வாழ்ந்த பக்திக் காதலி நம் த்யாகராஜ குரு.

ஒரு மாளிகை, பெரிய மாளிகை, சிங்கார மாளிகை, நாற்புறமும் வாசல் அமைந்த மாளிகை அவரவர் விரும்பிய வாசல் வழி வரலாமே! அவரவருக்கு அருகிலுள்ள, சாத்தியமான வழியில் வரலாமே! அப்படித்தால் ஸ்ரீராம பிரானின் அருட் கோவிலுக்கு அந்த அற்புத மாளிகைக்கு சத்புத்ர மார்கம், ஸஹமார்கம், தாசமார்கம், சன்மார்கம் என்ற நான்கு வாயில்கள் உள்ளன. என்று தன் கீர்த்தனைகளால் காட்டி ஏதாவது ஒரு வாசல் வழியாக வந்து சேருங்கள் என்று அழைக்கின்றார். வழியும் காட்டுகின்றார்!

"சேரவாரும் ஜெகத்திரே!"

# 6. நெஞ்சுக்கு நிம்மதி

உலகில் எல்லாவற்றையும் பெற மனிதனால் இன்று முடிகிறது. பணமா..... நாலுவகையாலும் பணம் பண்ணத் தெரிந்து கொண்டுவிட்டான் மனிதன்! பதவியா - அதையும் எப்படியும் பெறத் தெரிந்து கொண்டு விட்டார்கள்! அரசியலிலோ, கட்சியிலோ, சங்கங்களிலோ, பதவி நாற்காலிக்காகப் பலவகைச் சண்டைகள் நடக்கின்றன! சிலர் தலைமைப் பதவியும் பெற்று விடுகின்றனர்! அல்லது குடும்பத்திலாவது பத்துப்பேரை அதிகாரம் செய்து 'தலைமை' கொள்கின்றனர். சுகங்கள்.... இந்த விஞ்ஞானயுகத்தில் குடும்பம் நடத்த வேலை பார்க்க, வாழ்க்கையை அனுபவிக்கப் பலவித வசதிகள் உள்ளன! சொகுசு வாழ்க்கை வாழ, சுகம் பெற முடிகிறது! உறவுகள்.... காசிருந்தால் ஊரே சொந்தமாகிறது! உலகே உறவாகிறது! ஆனால்... ஒன்று மட்டும் கிடைக்க மாட்டேன் என்கிறது. என்ன அது? நெஞ்சுக்கு நிம்மதி!

"எங்கே நிம்மதி எங்கே நிம்மதி
அங்கே எனக்கோர் இடம் வேண்டும்!"

என்று கண்ணதாசனுடன் சேர்ந்து நாமும் பாடுகிறோம். அது எங்கே, எப்படி, என்ன விலைக்குக் கிடைக்கும்? " நெஞ்சுக்கு நிம்மதி, ஆண்டவன் சன்னதி" இதைப் புரிந்து கொண்டு பக்தி மார்க்கத்தில் தானும் நிம்மதியாக வாழ்ந்து, நமக்கும் நிம்மதி பெற வழி சொன்ன சத்குருவின் சன்னதி, நெஞ்சுக்கு நிம்மதி தரும்! "தவமிருந்தாலும் கிடைக்காதது நிம்மதி", அதைத் தருவது பக்தி நிறைந்த கானமே!

ஒருமுறை அக்பர் பாதுஷா ஊரின் வெளியே உலவி வந்த போது ஒரு குடிசையிலிருந்து, காற்றிலே மிதந்து வந்த கானாமிர்தத்தில் தன்னை மறந்து போனார். மறுநாள் அவை கூடியபோது தான்சேன் என்ற இசைப் பேரறிஞரிடம் "தான்சேன்! நீங்கள் மிகமிக அருமையான பாடகர் தாம். நான் வருடமெல்லாம் கேட்டு மகிழ்கிறேன். ஆனால், நேற்று அந்தக் குடிசையிலிருந்த பக்தரின் பாடல் என் உயிரை ஈர்த்ததே அதற்கு என்ன காரணம்?" என்றார். தான்சேனா, சிரித்துக்கொண்டே," மன்னவரே! அவர் பக்தர், ராமதாசர், நான் உங்களை மகிழச் செய்யப் பாடுகிறேன். அவரோ பகவானை மகிழ்விக்கப் பாடுகிறார். ஆனால் தான் அந்த ஜீவநாதம், ஆன்ம ராகம், உயிரை ஈர்க்கிறது!" என்றார். சத்குருவின் இசை இராமனிடம், இராமனுக்காக இராம பக்தியுடன் சமர்ப்பிக்கப் பெற்ற இசை. அது தான் உலகை ஈடேற்றும்!

"ஊரிலேன் காணியில்லை,
உறவுமற் றொருவரில்லை - என்றார் ஆழ்வார்.
"மற்றுப் பற்றெனக் கின்றி நின்

திருப்பாதமே மனம் பாவித்தேன்" - என்றார். சுந்தரர்! அந்த உறுதி கொண்ட நெஞ்சு நமக்கும் இருந்தால் என்றும் நிம்மதி வரும்!

"இடரினும் தளரினும் எமதுறு நோய்
தொடரினும் உனகழல் தொழு தெழுவேன்!

என்பது உறுதி நிறைந்த பக்தி, அதைக் கொண்டிருந்த நம் சத்குரு, என்ன வந்தாலும் உன்னை நான் விட மாட்டேன், என்று பாடுகிறார்.

**ஹரிகாம்போதி** **தேசாதி** (பாடல் 230)

பல். எந்தரா நிதநகு எந்த போநி நீ
செந்த விடுவ ஜால (எந்த)

அ.ப. அந்தகாரி நீ செந்தஜேரி ஹனு
மந்துடைன கொலுவலேதா (எந்த)

**சரணம்:**

1. சேஷுடு சிவுனிகி பூஷுடு லக்ஷ்மண
வேஷியை கொலுவ லேதா (எந்த)
4. ஆகமோத் தமமகு நீகுணமுலு ஸ்ரீ
த்யாக ராஜு பாடக லேதா (எந்த)

**பொருள்:**

எத்தனை வந்தாலும், என்ன தான் போனாலும் உன்னை நான் விடமாட்டேன்! காலனை வென்ற சிவனான ருத்ரன், அனுமனாக உனக்குத் தொண்டு புரியவில்லையா?

பரமசிவனின் ஆபரணமான ஆதிசேஷன் லக்ஷ்மணனாகி உனக்குச் சேவை செய்யவில்லையா? வேதங்கள் புகழும் உன் குணக்கடலை இந்தத் தியாகராஜன் பாடவில்லையா! ராமனுக்கு அருகிலிருப்பதும் அவனுக்குத் தொண்டு புரிவதும் என்றும் நிம்மதி தருவன்! அப்படி, சீதை, இலக்குவன் இவர்கள் ராமனை என்றும் நீங்காமலிருக்கிறார்களே! அவர்கள் எப்படித்தான் வழி பட்டார்களோ என வியக்கிறார் ஸ்வாமிகள்! பாடலின் வழி நம்மையும் வியக்க வைக்கிறார்!

**கரஹரப்ரியா** (பாடல் 132)

அ.ப. சுக்கல ராயுநி கேரு மோ முகல
ஸாததி சீதம்ம ஸௌமித்ரி ராமுநி கிரு (பக்கல)

**சரணம்:**

தனுவுசே வந்தன மொநரிஞ்சு சுன்னரா
சநுவுந நாம கீர்த்தன ஸேயு சுன்னரா
மனஸாந தலசி மெய் மறசி யுன்னரா
நெந ருஞ்சி த்யாக ராஜு நிதோ ஹரி
ஹரி மீரிரு (பக்கல)

**பொருள்:**

அன்னை சீதையே! இலக்ஷ்மணனே! ராமனுக்கு இருபுறமும் நின்று நீங்கள் சேவை புரியும் மர்மத்தை எனக்குத் தெரிவிக்க லாகாதா? எண் சாண் கிடையாக (சாஷ்டாங்க) நமஸ்காரம் செய்கிறீர்களா? பக்தியுடன் நாம சங்கீர்த்தனம் செய்கிறீர்களா? மனத்தில் அவனை இருத்தி மெய்ம் மறந்து போகிறீர்களா? இந்தத்யாகராஜனிடம் அன்பு கொண்டு அந்த மர்மத்தை விளக்கலாகாதா?

உள்ளம் என்பதே மலர்க் கூடைதான்! அதில் அன்பு மலர்களை நிரப்பி வைத்தால் அது என்றும் அருள் மணம் வீசிக் கொண்டிருக்கும்! சத்குருவுக்குப் பரந்த உள்ளம்! "நாளை" என்று ஒன்றிற்காகச் சேமிக்கத் தெரியாது வாழ்ந்தவர். 'நாளை' நம்வசம் இல்லையே! ஆத்மார்த்தமாக அவர் செய்யும் பூஜைக்கு அவரது சீடர் வாலாஜா பேட்டை வெங்கட்ரமண பாகவதர் அன்புடன் துளசி தளங்களை ஒரு குடலையில் கொண்டு வருவாரம். பவ்யாமாக அக்குடலையைத் தன் குருவின் திருமுன்னர் வைப்பாராம். 'துளஸி தளமுலசே சந்தோஷ முகா பூஜிந்து' என்று துளஸி தளம் எடுத்துப் பூஜிப்பாராம் சத்குரு. சரணம் பாடும் போது 'ஸரஸீருக, புன்னாக, சம்பக, பாடல,

குரவக, கரவீர, மல்லிகா என்று மலர்களின் பெயரைச் சொல்லி த்யாகராஜர் பாடப் பாடக்குடலையிலிருந்த துளஸி பலவித மலர்களாக மாறிவிடுமாம்! "பக்தியே சகல சக்தியும்!" ஆகுமே! சாதாரண ஓலைக் குடலையை அழகிய தங்கக் கூடையாக பாவியுங்கள். வெறும் இலைகள் அல்ல, உள்ளே பலப்பல மண மலர்கள்! என் ராமன்மீது அன்புடன் சொரியுங்கள்! இது வல்லவா நிம்மதி!

**ஆஹிரி** **சாபு** (பாடல் 639)

**பல்.** சல்லரே ராமச் சந்த்ருநி பைனிபூல

**சரணம்:**

ஸொம்பைன மநஸுதோ
நிம்பைன பங்காரு
கம்பலதோ மஞ்சி
சம்பக முலனு - (சல்லரே)

4. அமித பராக்ரம த்யுமணி குலார்ணவ
விமல சந்த்ரு நிபை ஹ்ருத் குமுத ஸும முல (சல்லரே)

6. எந்நரானி ஜனன மரணமுலே குண்டே
மனஸார த்யாக ராஜநுதுநி பைநிபூல (சல்லலே)

**பொருள்:**

பொழியுங்கள் இராமன் மீது மலர்களைச் சொரியுங்கள்! நிறைவான மனத்துடன் அழகிய பொற் கூடைகளில் நறுமணம் வாய்ந்த சண்பக மலர்களைச் சேர்த்து ராமன் மீது பொழிக! அளவற்ற பராகரமம் உடையவனும், சூர்ய குலம் எனும் கடலில் உதித்தவனுமான ராமச்சந்திரன் மீது இதயம் எனும் குமுத மலர்களைச் சொரியுங்கள்! பிறப்பு, மரணம் இவற்றைத்

தவிர்க்க, மனமார த்யாகராஜனால் வணங்கப் பெறும் ஹரியின் மீது மலர்களைப் பொழியுங்கள்.

தூயமலர்களுடன், மனமும் தூய மலராக மாறி விட்டால், உள்ளமே கோவில்தான் உடம்பே அதன் பிராகாரம் தான். வாயே கோபுரம் தான். சீவனே சிவலிங்கம் தான்! வாழ்வே ஆனந்தம் தான்! நிம்மதி தான்!

## தகாத எண்ணங்கள்

உலகில் பலருக்கு, அமைதியின்மைக்குக் காரணம் அவர்களின் மனத்திலுள்ள தகாத எண்ணங்களே! "நல்லதை நினை, நல்லதைப் பேசு, நன்றே செய்!" என்று அருளாளர்கள் சொன்னாலும் கேட்டு நடப்பவர் எத்தனை பேர்? சத்குரு அவர்கள் நம்மைப் போன்ற பாமரர் நிலைக்கு இரங்கினார். பாடலாக மலர்ந்த அவரது கருணைச் சிந்தனை இதோ!

**சுத்த தன்யாசி** **தேசாதி** (பாடல் 112)

**பல்.** எந்த நேர்ச்சின எந்த ஜூசின
அந்த வாரலைன காந்த தாஸுலே- (எந்த)

**அ.ப.** ஸந்ததம்பு ஸ்ரீ காந்த ஸ்வாந்த ஸித்
தாந்தமைன மார்க சிந்தலேனிவா (எந்த)

**சரணம்:**

பரஹிம்ஸ பர பாமான்யதன
பரமானவா அபவாத
பர ஜீவனாம்முல கந்ருதமே
பாஷிந் சேரய்ய த்யாகராஜ நுத (எந்த)

குரவக, கரவீர, மல்லிகா என்று மலர்களின் பெயரைச் சொல்லி த்யாகராஜர் பாடப் பாடக்குடலையிலிருந்த துளஸி பலவித மலர்களாக மாறிவிடுமாம்! "பக்தியே சகல சக்தியும்!" ஆகுமே! சாதாரண ஓலைக் குடலையை அழகிய தங்கக் கூடையாக பாவியுங்கள். வெறும் இலைகள் அல்ல, உள்ளே பலப்பல மண மலர்கள்! என் ராமன்மீது அன்புடன் சொரியுங்கள்! இது வல்லவா நிம்மதி!

**ஆஹிரி** **சாபு** (பாடல் 639)

**பல்.** சல்லரே ராமச் சந்த்ருநி பைனிபூல

**சரணம்:**

ஸொம்பைன மநஸுதோ
நிம்பைன பங்காரு
கம்பலதோ மஞ்சி
சம்பக முலனு - (சல்லரே)

4. அமித பராக்ரம த்யுமணி குலார்ணவ
விமல சந்த்ரு நிபை ஹ்ருத் குமுத ஸும முல
(சல்லரே)

6. எந்நரானி ஜனன மரணமுலே குண்டே
மனஸார த்யாக ராஜநுதுநி பைநிபூல (சல்லலே)

**பொருள்:**

பொழியுங்கள் இராமன் மீது மலர்களைச் சொரியுங்கள்! நிறைவான மனத்துடன் அழகிய பொற் கூடைகளில் நறுமணம் வாய்ந்த சண்பக மலர்களைச் சேர்த்து ராமன் மீது பொழிக! அளவற்ற பராகரமம் உடையவனும், சூர்ய குலம் எனும் கடலில் உதித்தவனுமான ராமச்சந்திரன் மீது இதயம் எனும் குமுத மலர்களைச் சொரியுங்கள்! பிறப்பு, மரணம் இவற்றைத்

தவிர்க்க, மனமார த்யாகராஜனால் வணங்கப் பெறும் ஹரியின் மீது மலர்களைப் பொழியுங்கள்.

தூயமலர்களுடன், மனமும் தூய மலராக மாறி விட்டால், உள்ளமே கோவில்தான் உடம்பே அதன் பிராகாரம் தான். வாயே கோபுரம் தான். சீவனே சிவலிங்கம் தான்! வாழ்வே ஆனந்தம் தான்! நிம்மதி தான்!

## தகாத எண்ணங்கள்

உலகில் பலருக்கு, அமைதியின்மைக்குக் காரணம் அவர்களின் மனத்திலுள்ள தகாத எண்ணங்களே! "நல்லதை நினை, நல்லதைப் பேசு, நன்றே செய்!" என்று அருளாளர்கள் சொன்னாலும் கேட்டு நடப்பவர் எத்தனை பேர்? சத்குரு அவர்கள் நம்மைப் போன்ற பாமரர் நிலைக்கு இரங்கினார். பாடலாக மலர்ந்த அவரது கருணைச் சிந்தனை இதோ!

**சுத்த தன்யாசி** **தேசாதி** (பாடல் 112)

**பல்.** எந்த நேர்ச்சின எந்த ஜூசின
அந்த வாரலைன காந்த தாஸூலே- (எந்த)

**அ.ப.** ஸந்ததம்பு ஸ்ரீ காந்த ஸ்வாந்த ஸித்
தாந்தமைன மார்க சிந்தலேனிவா (எந்த)

**சரணம்:**

பரஹிம்ஸ பர பாமான்யதன
பரமானவா அபவாத
பர ஜீவனாம்முல கந்ருதமே
பாஷிந் சேரய்ய த்யாகராஜ நுத (எந்த)

**பொருள்:**

திருமகள் நாயகனான பகவானின் திருவுள்ளப் படி பரமார்த்த வழியில் சிந்தனை செய்யாதவர்கள் என்ன படித்தாலும், எதை எதைப் பார்த்தாலும், பெண் பித்தர்களா யிருக்கிறார்கள்! பிறரைத் துன்புறுத்தல், பிறர் மனைவிக்கு ஆசைப் படுதல், பிறர் சொத்துக்கு அலைதல், பிறரை நிந்தனை செய்தல், தமது குடும்பத்தார் ஜீவனத்திற்காகப் பொய் பேசுதல் என்று மக்கள் திரிகிறார்களே! (இவர்களுக்கு எப்படி நிம்மதி, அமைதி கிடைக்கும் என்று சுவாமி வருந்திப் பாடுகிறார்.) பிறருக்கு வாடும் உள்ளம், வாடிய பயிரைக் கண்ட போதெல்லாம் வாடும் உள்ளம், வள்ளல்களின் உள்ளம், கவிவள்ளல், இசை வள்ளல் எனப் போற்றப் பெறும் சத்குரு கருணை வள்ளலாகப் பிற உயிர்கள் மீது இரக்கத்துடன் பாடுவது இயல்புதானே!

**"காணாகண், கேளா செவி"**

உலகம் அளந்தவன், உலக முண்டவன், உலகினப் காப்பவன், அவன் தான் திருமால் வாய் அவனையன்றி வாழ்த்தாது. கை உலகம் தாயவனை அன்றித்தான் தொழாது. அவன் அழகு, மங்கள, விக்ரஹத்தையன்றி வேறு எதையும் காணா கண்! போர் முகத்தில் பார்த்தனின் புயங்களைக் காத்திடக் கீதை புகன்ற பரந்தாமன் புகழன்றி வேறு எதையும் கேளா என் செவிகள், என்று ஒருவர் நெஞ்சம் உறுதி கொண்டுவிட்டால் அது ஆனந்தப் பூந்தோப்பாக அமைதி நந்தவனமாகத் தானே இருக்கும்!

**நவரசகன்டை** **ரூபகம்** (பாடல் 261)

பல். நினு விநா நாமதெந்து
நிலுவதே ஸ்ரீ ஹரி ஹரி (நினு)

அ.ப. கனுலகு ஸொக ஸெந்தோ
க்ரம்மி யுன்னதி கநுக (நினு)

**சரணம்:**

நீது கதலு வீநுலந்து நிண்டியுன்னதி ராம
ஸ்ரீதநி நாமமு நோடே ஜெலிகி யுன்னதி கநுக (நினு)

**பொருள்:**

உன்னையன்றி வேறு யாரிடமும் என் மனம் நிலை பெருது! ஸ்ரீ ஹரியே! உன்னழகைக் கண்டு என் கண்கள் மகிழ்ச்சி நிறைந்துள்ளன. உன்னுடைய திவ்யமான் சரிதம் கேட்டு என் செவிகள் குளிர்ந்துள்ளன. நாவில் அளிப்பவனே! உன் திருநாமம் என் நாவில் விளங்குகிறது. என்று பாடும் சத்குரு போல நாம் பாடுவது என்று? அன்றல்லவா நிம்மதி நிலை பெறும்!

பக்தி என்பது மனத்தின் ஓர் உணர்வு! அது எப்படி இருக்கும் என்று வெளியில் படம் போட்டுக் காட்ட முடியுமா! அனுபவித்தால் தான் தெரியும்! பக்தர்கள் எப்படியிருப்பார்கள்.....? ஸ்ரீ வைஷ்ணவர்கள் ஒரு வியாக்யானம் சொல்வார்கள்!" கொக்குப் போல இருப்பார், கோழி போல இருப்பார், உப்பைப்போல் இருப்பார்," கொக்கு மீன்வரும் வரை பொறுமைத் தவம் இருப்பது போல் இருந்து, சட்டென்று கொத்திக் கொள்ளும். பக்தர்கள் இறைவன் அருளுக்கு ஏங்கித் தவமிருந்து, காலம் வரும் போது, ஞானம் கனியும் போது சட்டெனச் சிக்கெனப் பற்றிக் கொள்வர். கோழி குப்பையைத் தான் கிளறும் ஆனால் சட்டென்று தீனி கிடைத்ததும் அதைத்

கொத்தி எடுக்கும். அதுபோல் உலகியல் குப்பைக்கு மத்தியில் உழன்றிருப்பது போல் இருந்தாலும் ஆன்மப் பசிக்கு உணவு கிடைத்ததும் சட்டென்று எடுத்துக் கொள்வார்கள். உப்பு தன்னைத் திரவத்தில் கரைத்துக் கொள்வதுபோல இறைவனுடனும், பாகவதர்களுடனும் தன்னைக் கரைத்துக் கொள்வார்கள் பக்தர்கள்!

"யானாகிய என்னை விழுங்கி வெறும்
தானாகி நிலை நின்றது தற்பரமே!"

என்றார் அருணாகிரிநாதர்! தான் அவனாக மாற எத்தனை சிரமப் படவேண்டும்! அதை நம் சத்குரு அனுபவித்துப் பாடினார்.

**ஆரபி** **திஸ்ரலகு** (பாடல் 558)

**பல்.** பலுகவேமி பதிதபாவன கருணை
ஜில்க வேமி சுஜந ஜீவன (பலுக)

**சரணம்:**

1. ஓர்ச்சின தாபமர்ச்சின அங்க
லார்ச்சின எந்த நேர்ச்சின (பலுக)

2. தலசின நின்னு கொலிசின யெந்த
வலசின பாக பிலிசின (பலுக)

3. தெலிபின மனசு நிலுபின பூஜ
ஸலிபின மதமு கலிபின (பலுக)

5. பட்டின யெந்த திட்டின நின்று
ஜுட்டின பதமு பட்டின (பலுக)

**பொருள்:**

பதித பாவனனே! நல்லோர்க்கு வாழ்வளிப்பவனே! நீ என்னுடன் உரையா மாட்டாயா? உன் கருணையை என் மீது தெளிக்க (காட்ட) மாட்டாயா? பொறுத்துப் பொறுத்துப் பார்த்தேன். என் தாபத்தை ஆற்றிக் கொண்டேன். அங்க லாயத்தேன் எத்தனையோ புரிந்து கொண்டேன்! உன்னையே தியானித்து, வணங்கிப் பரிவுடன் அன்பு செலுத்தி அழைத்தேன். என்னுடைய நிலையைத் தெரிவித்தேன். மனத்தை உன்னிடம் நிறுத்தி உன்னை பூஜித்தேன். உன் வழியை நான் பின் பற்றினேன். உன்னை நெருங்கினேன், பலமுறை திட்டினேன். ஆனாலும் உன்னையே சுற்றிச் சுற்றி வந்து உன்பாதம் பற்றினேன்!

இந்தப் பாடலின் பொருளில் முக்கியமான இடம் "உன்னைத் திட்டினாலும் உன் பாதமே பற்றினேன்" என்பது. அவன் பாதம் தான் நமக்கு எல்லாம் "த்வமேவமாதா சபிதாத்வமேவ" தாயும் நீயே தந்தை நீயே, என்று பற்றிக் கொள்வதே நெஞ்சுக்கு நிம்மதி!

## யாரைப்பாட....?

மனிதன் இச்சகம் பேசுவதில் கெட்டிக்காரன். முகத்திற்கு நேரே இந்திரனே, சந்திரனே என்று புகழ்வான். முதுகின் பின் இகழ்வான்! முதுகில் நமக்கு ஆண்டவன் கண் கொடுக்காமல் போனானே! கொடுத்திருந்தால், புறம் பேசுவோரை எளிதில் காணலாமே! வழங்காத கையனை வள்ளல் என்றும், உளறு வாயனை அதிமேதாவி என்றும், பயந்து நடுங்குபவனைப் புலியேறு என்றும் பாடுவதில் சுகம் உண்டா! எல்லாப் புகழுக்கும் உரிய இறைவனைப் பாடுவதில் சுகமா? கங்கை நீர் இருக்கும் போது, கிணற்று

நீரைத் தேடிக் குளிப்பவன் அறிவிலிலா! இந்துக்களின் புனித ஆறு கங்கை. ஆடுவர் பாவம் போகும் அழகு பாகீரதி அது! அதில் குளிப்பது நலமா? கிணற்றில் உள்ள நீரை இறைத்துக் குளிப்பது சுகமா! அதுபோல் கர்வம் பிடித்த மனிதரைப் புகழ்வது இன்பமா! ராமனின் கிருபையைப் போற்றிப்பாடுவது சுகமா! மனமே சொல்! எது நிம்மதி! என்று கேட்ட பாடல் சங்கீத உலகில் பிரசித்தமான 'நிதிசால சுகமா?' என்ற பாடல்! மதுரை மணி ஐயர் பணம் வாங்கும் கச்சேரிகளில் மட்டும் 'நிதிசால சுகமா' பாடலைப் பாடமட்டாராம்! ஏன் தெரியுமா? பணம் சுகம் தருமா என்ற சத்குருவின் பாடலைப் பணம் வாங்கும் கச்சேரியில் பாடுவது சத்குருவின் தூய சிந்தனைக்கு மாறானது, அவரை அவமதிப்பது என்று தான்!

"தமதம மனு கங்கா ஸ்நானமு சுகமா! கர்
தம துர்விடிய கூப ஸ்நானமு சுகமா!
மமத பந்தனயுத நரஸ்துதி சுகமா!
சுமதி த்யாகராஜனுதுனி கீர்த்தனமு சுகமா?"

என்ற சரணத்தில் (நிதி சால சுகமா - கல்யாணி ராகப் பாடலில்) அமைதி எனும் கங்கையில் குளிப்பது சுகமா! இந்திரிய சுகமான கிணற்று நீரில் குளிப்பது சுகமா! கர்வம் பிடித்த மனிதனைத் துதிப்பது சுகமா! இத்தியாகராஜனால் பாடப்பட்ட ராமனைப் புகழ்வது சுகமா - என்று கேட்டு சுகம் "அவன்" புகழைப் பாடுதலே என்று புரிய வைக்கிறார்.

## சலிப்பு?

மிக்க அன்புள்ளவரிடம் சலித்துக் கொள்வோம்! ராமனிடம் பரிபூர்ண சரண் அடைந்திருந்த நம் நாத பிரம்மமாம் த்யாக பிரம்மமும் சலித்துக் கொள்வது போலவும், வெறுப்பது போலவும், திட்டுவது போலவும் பாடுகிறார்.

கேதார கௌளை ராகத்தில் வரும்
பின்வரும் பாடலைப் பாருங்கள்:-

(பாடல் 251)

**பல்.** கருணாஜலதீ! தாசரதீ!
கல்யாண சுகுணநிதீ! (கருணா)

**அ.ப.** தருணாருணநிப சரணாஸுரமத
ஹரணா ஸ்ரிதஜன சரணாத்புத குண (கருணா)

**சரணம்:2**

ஸுரமுனி வரநுத ஸரஸமு தோ நந்து
கருணிஞ்சுதே நீது **தண்ட்ரி ஸொம்மு**
**வெறவக போநேரது!** எந்துகு வாது!
ஹரி கணாதிப பரிசராகம
சர பராத்பர தரமுகாதிக
ஜரண பக்தி விதரணமுகநீ
தருணமிதி ஸ்ரீகர தராதிப (கருணா)

**பொருள்:**

கருணைக்கடலே! தாசரதீ! இளஞ்சூரியன் போலச் சிவந்த பாரத்பரனே! அரக்கர்களின் மதத்தை அடக்குபவனே! சரணடைவோரின் புகலே! அற்புத குணசீலனே!

**கேதார கௌளையில் வரும் மற்றொரு பாடல் இதோ:**

**கேதார கௌளை** **ஆதி** (பாடல் 255)

**பல்.** ஸிக்குமாலி நாவலெ தர நெவ்வரு
திருக ஜாலரய்ய (ஸிக்கு)

**அ.ப.** முக்குரிலோ மேலைந ராமமா
முகாப்ஜ திநரமண நின்னுநம்பி

**சரணம்:**

1. முந்தர தயதோ பலிகிந திங்க
முந்து ராக போயெ
தந்த நாலதோ திநமுலு கடிபே
தாரி தெலிஸி போயே
அந்தரி சேதநு நாப்ரது குலிபுடு
நிந்தல கெட மாயெ
மந்தர தர நா ஜீவுடு ஜீவந
மிந்து ஸேய நாயெ அநி தெலிஸி

**பொருள்:**

உன்னை நம்பி வெட்கத்தை விட்டு இவ்வுலகில் என்னைப் போல் யாராவது திரிவார்களா? மும்மூர்த்திகளுக்கும் மேலான ராமா! லக்ஷ்மியின் தாமரை வதனத்தை மலர்விக்கும் சூரியனே! உன் வார்த்தைகள் நிறைவேறவில்லை! உன்மாயா ஜாலங்களிலே நாள்கள் கழிகின்றன! எனக்குப் புரிந்து விட்டது. என் பிழைப்பு பலரின் கேலிக்கிட மாகிவிட்டது. மந்தர மலையை எடுத்தவனே! (உன்னை நான் மலையைத் தூக்கவா வேண்டினேன்!) என் ஜீவன் இப்படிக் கழிய வேண்டியிருக்கிறதே!

தேவர் முனிவரால் தொழப்படுபவனே! அன்பாக என் மீது கருணை காட்டினால் உங்க **அப்பாவின் சொத்து செலவழிந்து விடாது**. பயப்படாதே! வீண்வாதம் ஏன்? வாரைத் தலைவனைத் தோழனாக உடையவனே! வேதங்களில் உறைபவனே! பராத்பரனே! என்னால் தாள இயலாது உன் பாதம் அருள இதுவே தருணம்! திரு அளிப்பவனே! பூமியின் நாயகனே!

(உங்க அப்பன் சொத்து குறைந்து போகும்! என்று கேலியாக அவனிடம் சலித்துக் கொள்வதும் ஓர் அழகு தான்!

## தலையெழுத்து

இறைவனைப் பற்றிக் கொள்வதற்குக் கூட அவன் அருள் தேவை! "ஆட்டு வித்தால் ஆர் ஒருவர் ஆடாதாரே!" என்ற அப்பரின் அருள்வாக்கும், 'அவன் அருளாலே அவன் தாள் வணங்கி என்ற மணிவாசகரின் மணி வாக்கும் இதையே வலியுறுத்துவன! உண்ணவும், உடுக்கவும், சுகிக்கவும் கூட எல்லாம் நம் தலையில் எழுதப்பட்டுள்ளன. 'அவரவர்க்கு விதித்தது விதித்தபடி' என்பர். இட்டமுடன் என் தலையில் இன்னபடி என்றெழுதி விட்ட சிவனும் செத்து விட்டானோ? என்றாள் ஔவைப் பாட்டி! நாம் செய்த வினையை நாம் அனுபவிக்கிறோம். இது தெரிந்தால் இறைவனை நொந்து பேச மாட்டோம்! இன்பத்தில் இறுமாந்து போக மாட்டோம். துன்பத்தில் துவளமாட்டோம்! த்யாகராஜ சுவாமிகள்த 'தொலினே ஜேஸின பூஜாபலமு' என்று அமைதி கொண்டார். நாம் அப்படி அமைதி கொள்கிறோமா! 'தீதும் நன்றும் பிறர் தரவாரா'! என்று நிம்மதியாக இருக்கிறோமா? இருக்கத் தெரிந்து கொள்வோம்! அருமையான பாடல் இதோ!

**கீரவாணி** **ஆதி** (பாடல் 123)

**பல்.** கலிகி யுண்டே கதா கல்குநு
காமித பல தாயக.

**அ.ப.** கலிநி இங்கித மெநுக நிந்நாடு கொண்டி
சலமு சேயக நா தலநு சக்கநி வ்ராத.

**சரணம்:**

பாகவதாக்ரேஸருலகு நாரத
ப்ரஹ்லாத பராசர ராமதாஸுலு
பாகுக ஶ்ரீரகு ராமுநி பதமுல
பக்தி ஜேஸிந ரீதி த்யாகராஜு கிபுடு.

**பொருள்:**

விரும்பிய பலனைத் தருபவனே! என் தலையெழுத்து நன்றாக இருந்தால் தானே நான் தெரியாமல் உன்னை நிந்தித்தேனே! கோபம் கொள்ளாதே! பாகவத சிரேஷ்டர்களான நாரதர், பிரகலாதன் பராசரர், ராமதாசர் உன் திருவடிக்கு ஆட்பட்டது போல் நானும் பக்தி செய்ய இத்தியாக ராஜனுக்கத் தலையெழுத்து நன்றாக இருக்கவேண்டும் அப்படிப்பட்ட தலையெழுத்தை நல்ல விதமாக ஆக்கிக் கொள்ளவும் இறைவனின் பாதமே கதி ஆனால், மக்கள் விருப்பம் எங்கெங்கோ போகிறது ராஜபாட்டை இருக்கும் போது சந்தில் நுழையும் சிலர் இருக்கிறார்கள்! ராமபக்தி எனும் ராஜமார்க்கம் இருக்கும்போது இதர தெய்வ வழிபாடு எனும் சந்தில் ஏன் போகிறீர்கள்? புஷ்டி தரும்பால் இருக்கும்போது வெறுக்கத் தக்க கள்ளை ஏன் விரும்புகிறீர்கள்? கண்ணுக்கு இன்பம் தர அவனுடை திவ்ய ரூபம் உள்ளது. நாவினுக்கு அருங்கலமாக அவனது நாமமும் இருக்கின்றனவே! என்று நமக்குரைத்து நாளும்

இன்பம் பெற வழி சொல்லும் சத்குரு பரம காருணிகர் அல்லவா! பக்தி வெறும் நடிப்பாக சில சமயம் போய் விடுகிறது! காவி உடை, கற்றைச் சடை முடி, கழுத்துநிறைய மணிமாலைகள் (துளசி மணியோ, ருத்ராட்சமோ, ஸ்படிகமோ) நெற்றி நிறையச் சமயச் சின்னங்கள், இவை மட்டும் பக்தியா? "நாடகத்தால் உன்னடியார் போல் நடித்து" என்று உண்மையான பக்தர் மணிவாசகர் கூறுகிறார். நாமோ நடிப்பிலேயே திருப்தியடைகிறோம்! எல்லாம் அறிந்தவன், எங்கும் நிறைந்தவன், யாதும் ஆனவன் அவனுக்குநம் நடிப்புத் தெரியும்! அந்த நடிப்பிலாவது **பக்தன்** என்ற நடிப்பு நல்லது தான்! கரஹரப்ரியாவில் 'நடசி நடசி' என்ற கீர்த்தனை இதை அழகாகக் காட்டும்.

'அட்டெ கநுல கூர்ச்சி தெறசி
ஸூத்ரமு பட்டி,
வெலிகி வேஸ தாருலை'

கண்களை மூடி மூடித் திறந்து ஜபமாலையைக் கையில் உருட்டி, வெளிவேடிம் போடுபவர் சிலரை நம் சுவாமிகளும் பார்த்திருக்கிறார் போலும்.

## சுவாமிகளின்
## அமைதியான வாழ்க்கை நெறி

எண்பத்து ஒரு ஆண்டு வாழ்வில் சுவாமி பொய்யறியாதவர், பகட்டறியாதவர், கடன்படாதவர், பிறரை நிந்திக்காதவர், இச்சகம்பேசி வயிறு வளர்க்காதவர், கலையை விற்காதவர், இறைவனைத் தவிர, மனிதரைத் துதிக்காதவர், நித்திய நியமங்களை மறவாதவர். சம்சார பந்தமே பெரிதென்று சிக்காதவர். யாரையும் மனம் நோகச் செய்யாதவர். பொருளே பெரிதென்று பற்று வைக்காதவர். மலையே விழுந்தாலும்

மாதவன் மீது பாரத்தைப் போட்டவர். அவனே எல்லாம் என்று வாழ்ந்தவர். சங்கீத உபாசனை வழியாக இறைவனை, மோட்சத்தை, அடைந்தவர், அடைய வழியும் காட்டியவர், இல்லறத்திலிருந்தும் தாமரை இலைத் தண்ணீர் போல ஒட்டாமல் வாழ்ந்தவர். இராம, காதை, இராம நாம ஜபம், இராம ரூபத், யானம், இராமநாம லிகிதம், என்று உலகமே இராமமயம் என்று வாழ்ந்த நாத பிரம்மம், அவர் பெற்ற பேரின்பம், சாந்தி. அமைதி இவற்றை நாம் பெற அவரது வாக்கு, வாழ்க்கை நெறி இரண்டையும் புரிந்து பின்பற்றி வாழவேண்டும்! உதடுகள் பேசிப் பயனில்லை, உள்ளம் உணரவேண்டும்! அப்போது தான் நிம்மதி! நிம்மதி! நித்தமும் நிம்மதி பெறலாம்.

கருணா ரஸா க்ஷாய
காமாரி விநுதாய
தருணா ருணாதி சுந் தரபதாய
நிருபம சரீராய, நிசிலாகம் சராய
ஸூர விநுத சரிதாய
ஸூவ்ருதாய (ஜய மங்களம்)

ஸர்வ லோக ஹிதாய
ஸாகேத ஸதனாய
நிர் விகாராய மாநித குணாய!
ஸார்வ பௌமாய போஷித த்யாகராஜாய
நிர்வாண பலதாய நிர்மலாய
(ஜயமங்களம் நித்ய ஜய மங்களம்)

"நீ நாம ரூபமுலகு
நித்ய ஜய மங்களம்"

சுபம்

## துணை பாடல்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. | அடிகிஸுகமு | - | மத்யமாவதி |
| 2. | அநாதுடனு | - | ஜிங்கல |
| 3. | அப்பராம பக்தி | - | பந்துவராளி |
| 4. | ஆடமோடிகலதே | - | சாருகேஸி |
| 5. | ஆரகிம்பவே | - | தோடி |
| 6. | இலலோப்ரணதார்த்தி | - | அடாணா |
| 7. | உபசாரமு | - | பைரவி |
| 8. | உபசாரமுலனு | - | பைரவி |
| 9. | உய்யால லூக | - | நீலாம்பரி |
| 10. | உண்டேதி ராமுடு | - | ஹரிகாம்போதி |
| 11. | எவரி மாட | - | காம்போதி |
| 12. | எந்த வேடு கொந்து | - | சரஸ்வதி மனோஹரி |
| 13. | எந்த நேர்ச்சினா | - | சுத்த தன்யாசி |
| 14. | எந்தரோ | - | ஸ்ரீ |
| 15. | எந்தரா நீ | - | ஹரி காம்போதி |
| 16. | ஏபனிகோ | - | அஸாவேரி |
| 17. | ஏமி ஜேஸிதே | - | தோடி |
| 18. | ஏல நீ தயராது | - | அடாணா |
| 19. | கத்தனு வாரிகி | - | தோடி |
| 20. | கருணா ஜலதீ | - | கேதார கௌளை |
| 21. | கலிகியுண்டே | - | கீரவாணி |
| 22. | க்ருபஜூ சுடகு | - | சாயாதரங்கிணி |
| 23. | கொலுவமரெகதா | - | தோடி |
| 24. | சலமேலரா | - | மார்க்கஹிந்தோளம் |
| 25. | சல்லரே | - | ஆகிரி |
| 26. | ஜயமங்களம் | - | புன்னாகவராளி |
| 27. | ஜோ ஜோ ராமா | - | ரீதி கௌளை |
| 28. | தவ தாஸோஹம் | - | புன்னாக வராளி |

| | | | |
|---|---|---|---|
| 29. | தொத்யக | - | கௌளிபந்து |
| 30. | தீனஜனாவன | - | பூபாளம் |
| 31. | துடுகு கல | - | கௌளை |
| 32. | நகுமோமு | - | ஆபேரி |
| 33. | நகுமோமு கலவாநி | - | மத்யமாவதி |
| 34. | நனுபாலிம்ப | - | மோகனம் |
| 35. | நாஜீவாதார | - | பிலகரி |
| 36. | நிதிசால | - | கல்யாணி |
| 37. | நின்னேநேர | - | பந்துவராளி |
| 38. | நின்னுவினா | - | நவரஸகன்டை |
| 39. | நீ தயராதா | - | வஸந்த பைரவி |
| 40. | பக்கல நிலபடி | - | கரகரப்ரியா |
| 41. | பதிகி ஹாரதி | - | சுருட்டி |
| 42. | பொத்து பொய்யே நீ | - | தோடி |
| 43. | படலிகதீர | - | ரீதிகௌளை |
| 44. | பண்டுரீதி | - | ஹம்சநதம் |
| 45. | பலுகவதேமிபதிதபாவன | - | ஆரபி |
| 46. | மனஸா எடுலோ | - | மலய மாருதம் |
| 47. | மனஸு நில்ப | - | ஆபோகி |
| 48. | மாகேலரா | - | ரவிச்சந்திரிகா |
| 49. | மீவல்ல | - | காபி |
| 50. | மேலுகோவய்ய | - | பௌளி |
| 51. | மேலுகோதயாநிதி | - | ஸௌராஷ்ட்ரம் |
| 52. | ரக்ஷபெட்டரே | - | பைரவி |
| 53. | ராம கதா ரஸ | - | மத்யமாவதி |
| 54. | ராம நனுப்ரோவரா | - | ஹரிகாம்போதி |
| 55. | ராமபக்தி | - | சுத்த மங்கள |
| 56. | ராமம்பஜேஹம் | - | காவேரி |
| 57. | ராராமாயிண்டி | - | அஸாவேரி |
| 58. | ருகலு பதிவேலு | - | தேசியதோடி |

| | | | |
|---|---|---|---|
| 59. | லேகனா நின்னு | - | அஸாவேரி |
| 60. | வந்தனமு | - | சகானா |
| 61. | வாடேரா | - | பந்துவராளி |
| 62. | விடமுஸேயவே | - | கரகரப்ரியா |
| 63. | விநதாஸுத | - | ஜயந்தசேன |
| 64. | சாந்தமுலேகா | - | சாமா |
| 65. | ஸ்யாமசுந்தராங்க | - | தன்யாசி |
| 66. | ஸ்ரீ ரகுவர | - | காம்போதி |
| 67. | ஸ்ரீ ராம ஜயராம | - | யதுகுல காம்போதி |
| 68. | சோபானே | - | பந்துவராளி |
| 69. | ஸ்மரணே சுகமு | - | ஜனரஞ்சனி |
| 70. | ஸங்கீத ஞானமு | - | தன்யாசி |
| 71. | ஸிக்குமாலி | - | கேதாரகௌளை |
| 72. | ஸீதா கல்யாண | - | சங்கராபரணம் |
| 73. | ஸீதாபதி நாமனஸுநா | - | கமாஸ் |
| 74. | ஸொகஸுஜுட | - | கன்னடகௌளை |
| 75. | ஹெச்சரிக | - | யாகுல காம்போதி |

## துணை நூல்கள் பட்டியல்

1. கம்பராமாயணம்
2. கபீர்தாசர் தோஹா
3. கந்தர் அநுபூதி
4. கண்ணதாசன் கவிதைகள்
5. கண்ணதாசன் திரை இசைப் பாடல்கள்
6. திருக்குறள்
7. திருப்புகழ்
8. திருவருட்பா

**திருமுறைகள்:**

9. தேவாரம் - திருஞானசம்பந்தர்
10. தேவாரம் - திருநாவுக்கரசர்
11. தேவாரம் - சுந்தர்
12. திருவாசகம் - மணிவாசகர்

**திவ்யப்பரபந்தம்:**

13. பெரியாழ்வார்
14. குலசேகரப் பெருமாள்
15. திருமங்கையாழ்வார்
16. பாரதியார் கவிதைகள்
17. புறநானூறு
18. பகவத்கீதை
19. ஸ்ரீத்யாகராஜஸ்வாமி கீர்த்தனைகள்
(பதிப்பு - பார்த்தசாரதி)



## டாக்டர் சரஸ்வதி இராமநாதன் M.A., Ph.D.,

பேராசிரியை டாக்டர் சரஸ்வதி ராமநாதன் அவர்கள் முயற்சியால் முன்னேற்றம் அடைந்தவர், பல நல்ல பண்புகளுக்கு இலக்கணமாகவும் இலக்கியமாகவும் அமைந்தவர்கள்.

இந்த இமாலய வெற்றியை அடைய அவர் எவ்வ்வளவு முயற்சிகளை மேற்கொண்டிருப்பார் என்று எண்ணிப் பாருங்கள்! அபார சாதனை இது!

அவர், சென்ற பிறப்பிலும் பெரும் தவம் செய்திருப்பார் என்றே எண்ணத் தோன்றுகிறது. தமிழ்க்கடல் ராய. சொ., கவியரசர் கண்ணதாசன், கம்பன் அடிப்பொடி எனப் பல சான்றோர் இவரைப் பாராட்டிப் போற்றி வளர்த்துள்ளனர். நயத்தகு நாகரிகத்தால், தனி ஒரு பெண்மகள், உலகமெல்லாம் சுற்றிச் சுற்றித் தமிழ்ப்பணி செய்து வருவது வியந்து பாராட்டத் தக்கதாகும்.

தமிழையும் இசையையும் இவர் வளர்க்கின்றார்! அவை இரண்டும் இவர் புகழை வளர்க்கின்றன!

பேச்சாற்றலோடு எழுத்தாற்றலிலும் சாதனை படைப்பதுதான் நிரந்தரப் புகழுக்கு ஆணிவேராகும். இந்நூல், அவரது பலமொழிப் புலமையை மேலும் வளர்த்துப் புகழ்பூக்கச் செய்கிறது.

பெண்மணியம் பேசுவோர், பேச்சைச் சற்று நிறுத்தி விட்டு, இப் பெண்மணியைப் படித்தால்..... "உயர்வு உங்கள் கையில்" என்பதை நிச்சயம் புரிந்து கொள்ளலாம்.

பாராட்டுக்கள்!